# ஜீவன், அனு என்ற இரு சுட்டிகள்

## திகைக்க வைக்கும் புதிர்களின் சுவட்டில்.



*லோக் நெஸ்* எனும் பயங்கர பிராணி ஸ்காட்லாந்திலுள்ள ஒரு பெரிய ஆழமான ஏரியில் அடிக்கடி பார்க்கப்பட்டதாக சொல்லப்படுகிறது. முதன்முதலாக 1933 ல் அது கண்டுபிடிக்கப்பட்டது. 40 அல்லது 50 அடி நீளமுள்ளது என்று சொல்லப்படுகிறது.

இமாலயப் *பனிமனிதன் (அபாமினபில் ஸ்நோமென்)* என்பது இமயமலையில் வசிக்கும் மிகப் பெரிய குரங்கைப் போன்ற ஒரு பிராணி என்று நம்பப்படுகிறது. அதை யாரும் பார்த்திருக்கவில்லையென்றாலும் ராட்சத காலடங்கள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன.

*இனமறியப்படாத பறக்கும் பொருள்கள்* (யு எப் ஓ) என்பவை பறக்கும் தட்டுகள் என்றும், இதரவகை விண்வெளிக் கப்பல்கள் என்றும் ஊர்ஜிதம் செய்யப்படாமல் கூறும் செய்திகளைச் சார்ந்தவை. இது போன்ற 13,000 செய்திகளை 1948 லிருந்து அமெரிக்க விமானப் படை பதிவு செய்திருக்கிறது.





புராதன கட்டுரைகளில் சொல்லப்பட்ட *அட்லாண்டிஸ்* எனும் தீவு, முன்னேறிய நாகரீகத்திற்கு உறைவிடமாக இருந்தது. ஒரு பூகம்பத்தில் கடலில் மூழ்கிவிட்டது. அதன் சரியான இடம் இதுவரை நிரூபிக்கப்படவில்லை என்றாலும், அது ஸ்காண்டிநேவியாவிலோ, அமெரிக்காவிலோ அல்லது கானரித்தீவுகளிலோ இருந்திருக்கலாம்.

*பெர்மூடா முக்கோணம்* வட அட்லாண்டிக் சமுத்திரத்தின் ஒரு பகுதி. 19ம் நூற்றாண்டின் பாதியிலிருந்து இப்பகுதியிலுள்ள சுமார் 50 கப்பல்களும் 20 ஆகாய விமானங்களும் முழுதாக மறைந்து விட்டிருக்கின்றன அல்லது கைவிடப்பட்ட நிலையில் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன.

**ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் ஒன்றுதான் மிகப்பாதுகாப்பான நிச்சயமான வழி உங்கள் எதிர் காலத்தைப் பாதுகாக்க, அதைப்பற்றிக் கண்டு பிடியுங்கள்.**



**ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆ:்ப் இந்தியா**

அடுத்தது: மனிதனின் மிகப் பெரிய சாதனைகளை இரு சுட்டிகள் கண்டறிகிறார்கள்.

# SPECIAL  OFFER

**FOR CHANDAMAMA READERS ONLY**

# Save Rs. 12/- to 32/-

## by NOW Subscribing to

## CHANDAMAMA CLASSICS & COMICS

| | Normal Rate | Concessional Rate |
|---|---|---|
| **24 months (48 issues)** | **Rs. 96/-** | **Rs. 64/-** |
| **12 months (24 issues)** | **Rs. 48/-** | **Rs. 36/-** |

**No extra Postage Charges**

CHANDAMAMA CLASSICS & COMICS are a new vision in Comics. They form a new dimension with the world famous

## WALT DISNEY'S

colourful creations and thoughtful themes.

**HOW TO ORDER**

Sending your subscriptions is very easy. Just fill up the coupon at the bottom, and mail it with Crossed Postal Orders worth Rs. 36/- or Rs. 64/- to the address below. You may also send a Money Order and mail the money order receipt and coupon to:

DOLTON AGENCIES
Chandamama Buildings
Vadapalani, Madras-600 026




Offer open till 14th NOVEMBER 1980 and only to Subscribers in India.

---

Mister/Miss ______________________ Amount Rs. __________

Address : ________________________________________

______________________________ PIN : [ | | | | | ]

Date of Birth : ______________ Signature : ______________

Send my copies for ____ months from the Issue Dated 20th OCT, 1980

# மங்கை

அக்டோபர்
இதழில்

**ஆரம்பமாகிறது**



சாரதா
விஸ்வநாத்
எழுதும்
தொடர் நவீனம்



## கங்கையின் பிரவாகத்தில்



# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'
நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

விருந்தினரை உபசரிக்காமல் அனுப்பி விட்டவர்கள் பின்னர் பெரும் இழப்பு ஏற்பட்டதாக எண்ணி மனம் வருந்துவார்கள். விருந்தினரை உபசரிப்பது மாபெரும் நிதியை அடைவதற்கு சமம். இதனையே வள்ளுவர்,

> பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
> வேள்வித் தலைப்படாதார்.

எனக் கூறி விருந்தினரை உபசரிப்பது எவ்வளவு முக்கியமானது என நமக்கு எடுத்து உரைத்துள்ளார்.

> உத்யமேன ஹி சித்தயந்தி கார்யாணி ந மனோ
> ரதைஹி ந ஹி சிம்ஹஸ்ய சுப்தஸ்ய ப்ரவிசந்தி முகே
> மிருகாஹ





மனக்கோட்டை கட்டினால் எதுவும் நடக்காது செயல்பட வேண்டும். சிங்கம் தூங்கிக் கொண்டே இருந்தால் அதன் வாயில் வந்தா மிருகங்கள் விழும்? இந்த வடமொழி சுலோகத்தின் கருத்தை ஏற்று, செயல்படுவதே மேல் என்பதை உணர்வோமாக.

மதிமுகம்: 68 அக்டோபர் 1980 புன்னகை: 4

தனிப் பிரதி: ரூ. 1-50 வருட சந்தா: ரூ. 18-00






**எஸ். சீனிவாசன், அனந்தபுரம்.**

கேள்வி : ராக்கெட் எப்படி அமைக்கப்படுகிறது? எப்படிச் செயல்படுகிறது?

பதில்! தீபாவளி வெடி வகையில் நாம் 'ராக்கெட்' என்பதையும் காண்கிறோம். அது எப்படி உயரச் செல்கிறது என்பதை எளிதில் அறிந்து விடலாம். துடுப்பை வலித்துப் படகை முன் தள்ளி செல்வதும் நாம் அறிந்ததே. . தீபாவளி ராக்கெட்டின் கீழ் பகுதியில் புகை கீழ்நோக்கி வர ராக்கெட் உயர எழும்புவதைக் காண்கிறோம். இந்தக் கீழ்நோக்கி வரும் சக்தி எதிர்புறமாக ராக்கெட்டை மேலெழும்பச் செய்கிறது. நாம் இந்த ராக்கெட்டின் மருந்துத் திரியில் நெருப்பு வைத்த பின்னரே புகை வந்து ராக்கெட்டை மேலே கொண்டு செல்கிறது. அந்த மருந்து எரிந்து காற்றாகி பீறிட்டு வரும் போது ராக்கெட் எதிர் திசையில் மேலே செல்கிறது.

ராக்கெட்டில் உபயோகிக்கப்படும் 'மருந்து' திரவமாகவோ, திடப் பொருளாகவோ இருக்கலாம். இந்தப் பொருள்கள் வெற்று வானவெளியில் கூட எரிய வேண்டும் என்றால் சாதாரணக் காற்றில் கலந்துள்ள பிரகணவாயு மட்டும் போதாது. ஏனெனில் உயரப் போக வானவெளியில் காற்று இராது. ராக்கெட்களை நடத்திச் செல்ல சாதாரணமாக இரு வகை எரிபொருள்கள் இருக்கும். ஒன்று தானே எரிவது. மற்றது எரிய வைப்பது. அதாவது பிராணவாயு. சாதாரணமாக இவற்றில் பிராணவாயுவை திரவ ரூபத்தில் இருக்க வைப்பார்கள். சாதாரணக் காற்றில் கலந்துள்ள பிராணவாயு காற்று வடிவமாக இருக்கும். பிராண வாயுவை திரவமாக்க மிகவும் குளிரச் செய்ய வேண்டும். இந்தப் பிராணவாயு மிகுந்த வேகத்தோடு வெளியே வந்தாலே ராக்கெட் உயரக் கிளம்பிச் செல்ல முடியும். இந்த எரிபொருளின் எரியும் சக்தியைக் கொண்டே ராக்கெட் அமைக்கப்படுகிறது. இந்த எரிபொருள்கள் சில சமயங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட ராக்கெட்டைச் செலுத்தக் கூடியதாக இருக்கும். அண்மையில் ஸ்ரீஹரி கோட்டாவிலிருந்து செலுத்தப்பட்ட 'ரோகிணி'யில் நான்கு ராக்கெட் பகுதிகளை உபயோகப்படுத்தி இருந்தார்கள்.




வட திசையில் கர்ப்பூரத் தீவில் பத்மகேளி என்ற ஏரி இருந்தது. அதில் ஹிரண்யகர்ப்பன் என்ற அன்னப் பறவை நீர்ப்பறவைகளின் அரசனாக இருந்து வந்தது. அது மற்ற பறவைகளின் நலன்களில் அக்கறை காட்டி அவற்றைப் பாது காத்து வந்தது.

அந்தக் குளத்திலிருந்து ஐநூறு மைல் தூரத்தில் விந்தியமலையில் சித்திரவர்ணன் என்ற மயில் இருந்தது. அது நிலப்பட்சிகளின் மன்னனாக இருந்தது. ஒரு முறை தீர்க்கமுகன் என்ற கொக்கு விந்திய மலைப் பகுதிக்கு வந்தது. அதனைக் கண்ட மற்ற பறவைகள் ''நீ யார்? எந்த நாட்டைச் சேர்ந்தவன்?'' என்று கேட்டன.

அதுவும் ''நான் கர்ப்பூரத் தீவில் இருப்பவன். எங்கள் மன்னர் ஹிரண்யகர்ப்பர் கடவுளின் அம்சம். எங்கள் இருப்பிடம் சொர்க்கலோகம் போன்றது" என்றது. அத்தோடு நில்லாமல் அது "நீங்களெல்லாம் இந்தக் காட்டை விட்டு விட்டு எங்கள் தீவிற்கே வந்து விடுங்கள் இது என்ன இடம்? நாங்கள் இருக்கும் இடம் போலவா இருக்கிறது? அதில் நூற்றில் ஒரு பங்கு கூட அழகாக இல்லையே'' என்று கர்வம் தலைக்கு ஏறக் கூறியது.

மற்ற பறவைகளோ ''உங்கள் ஊரில் உண்ண உணவு கிடைக்காமல் தானே பறந்து இங்கு வந்தாய்! உனக்கு வாய் வேறு கேடா?'' என்றன. ஒரு பறவை ''உன் ஹிரண்யகர்ப்பனை அரசனாக்கியது யார்?'' என்று கேட்டது. அந்தக் கொக்கு ''உன் சித்தி



ரவர்ணனை அரசனாக்கியது யார்?''
என்று எதிர்க் கேள்வி போட்டது.

பறவைகளோ ''எம் சித்திர வர்ண மன்னர் ஜம்புத்வீபம் முழு வதற்கும் மன்னர். உன் கர்ப்பூரத் தீவு இந்த நாட்டிற்குள் அடங்கியது'' என்றன.

கொக்கோ ''வாயால் எவ்வளவு நாடுகளை வேண்டுமானாலும் உங்களுடையது என்று சொல்லிக் கொள்ளலாம். அப்படிப் பார்த்தால் எம் மன்னரும் ஜம்புத்வீபத்தின் மன்னர்தாம்'' என்றது.

பறவைகளோ ''அதெல்லாம் இல்லை. போரிட்டு எங்களை வென்றாலே உன் மன்னர் எங்களின் மன்னராக முடியும்'' என்று கூறி அந்தக் கொக்கைத் தம் மன்னன் முன் கொண்டு போய் நிறுத்தின.

அவை கொக்கு கூறியதை சித்திரவர்ணனிடம் கூறின. அப்போது சித்திரவர்ணனிடம் தூதனாகப் பணி புரியும் கிளி கர்ப்பூரத் தீவு ஜம்புத்வீபத்தில் அடங்கியதே என்றும் சித்திரவர்ணன் கர்ப்பூரத் தீவிற்கும் மன்னனாவான் எனவும் கூறியது. கொக்கோ தன் மன்னனை ஹிரண்யகர்ப்பனே ஜம்புத்வீபத்தின் மன்னன் எனக் கூறியது.

"அதை நீ எப்படி நிரூபிப்பாய்?" என சித்திரவர்ணன் கேட்க தீர்க்கமுகனும் ''போர் புரிந்துதான்'' என்று கூறி ''நீங்கள் இப்போதே ஒரு தூதனை அனுப்பிக் கேளுங்கள். எம் மன்னர் உங்கள் கூற்றை ஏற்க மாட்டார். போருக்கு வருவார். பிறகு முடிவு தெரியும்'' என்று கூறியது.

சித்திரவர்ணனின் மந்திரியான தூரதர்சி என்ற கழுகு கூரிய அறிவு கொண்டது. அது கொக்கிடம் ''உங்கள் மந்திரி யார்?'' என்று கேட்க கொக்கும் ''சர்வக்ஞர் என்ற சக்கரவாகப்பட்சி'' என்றது.

சித்திரவர்ணன் தன் மந்திரியோடு கலந்து ஆலோசித்து விட்டு கிளியைத் தன் தூதனாக ஹிரண்யகர்ப்பனிடம் அனுப்பத் தயார் என்றும் ஆனால் தீர்க்க முகனோடு

சேர்ந்து செல்ல முடியாது எனக் கூறியது.

அது கேட்டுக் கொக்கு ''நான் என்ன துஷ்டனு?'' என்று கேட்க கிளியும் ''ஆமாம். உன் துடுக்கான பேச்சும் கர்வமும் உன் குணத்தைக் காட்டுகிறது. ஒருவனது பேசும் முறையிலிருந்தே அவனது குணத்தைக் கண்டு கொள்ளலாம். கடுஞ் சொல் கூறி மனதைப் புண்படுத்தினுல் அவனைக் கொடிய குணம் கொண்டவன் எனக் காணலாம். இதமாகப் பேசினுல் நல்லவன் எனப் பெயர் பெறலாம்'' என்றது.

தீர்க்கமுகன் தன் நாட்டிற்குப் போய் ஹிரண்யகர்ப்பனிடம் நடந்ததைக் கூறியது. அவனும் தீர்க்கமுகனிடம் ''நீ போர் புரியலாம் என அவசரப் பட்டுக் கூறி விட்டாய். எதிலும் நிதானமும் முன் யோசனையும் வேண்டும். எதையும் அவசரப்பட்டு செய்யவோ, சொல்லவோ கூடாது. இப்போது கூட உனக்கு நம் பலம் என்ன என்பது தெரியாது'' என்றது.

சர்வக்ஞனும் ''தீர்க்கமுகன் முட்டாள்த்தனமாக நடந்து விட்டான். வீண் மனஸ்தாபத்தை ஏற்படுத்தி விட்டான்'' எனத் தனிமையில் மன்னனிடம் கூறி ''கொக்கு இப்படிக் கூற ஏதாவது காரணம் இருக்க வேண்டும். என்



மனதில் தோன்றும் சந்தேகம் என்னவென்றுல் நம் படைதலைவர்களில் ஒருவனே அதை அவ்வாறு கூறச் சொல்லி இருப்பான் என்பதே'' என்றது.

அப்போது மன்னன் "இப்போது நாம் என்ன செய்யவேண்டும்?'' என்று கேட்கவே மந்திரியும் "நாம் ஜம்புத்வீபத்திற்கு இரு ஒற்றர்களை அனுப்புவோம். ஒருவன் அரசனிடம் தூது செல்வான். மற்றவன் நாட்டு நிலையை வேவு பார்த்து வருவான்'' என்றுன். மன்னனும் தீர்க்கமுகனையும் இன்ஞெரு கொக்கையும் ஜம்புத்வீபத்திற்கு அனுப்பத் தீர்மானித்துக் கொண்டான்.

இதே சமயம் சித்திரவர்ணனின் தூதனுகக் கிளி வந்துள்ளது என்ற செய்தி ஹிரண்யகர்ப்பனுக்குக் கிடைத்தது. கிளியை தக்கபடி உபசரித்து விடுதியில் இருக்கச் செய்யுமாறு ஹிரண்யகர்ப்பன் உத்தரவிட்டான்.

பிறகு தன் மந்திரியிடம் ''அப்படியானுல் இனி போர் தானே'' என்று அவன் கேட்க மந்திரியும் ''அரசே, போர் என இப்போதே தீர்மானித்து விட வேண்டாம். எதிரியிடம் நாட்டை ஒப்படைப்பது எவ்வளவு தவறே அவ்வளவு தவறு அவசரப்பட்டுப் போரில் இறங்குவதும். இன் சொல், பரிசு, மிரட்டல், அரசியல் தொடர்பு துண்டிப்பு இவையெல்லாம் பயனற்றுப் போனுலே போர் புரியப் போகலாம். போர் பற்றி அறியாதவனே தன்னை மாபெரும் வீரனுக நினைத்துக் கொள்வான். போர் வாழ்வதா சாவதா என்பதைத் தீர்மானிப்பது. போர் என்ருல் மகிழ்ந்து துள்ளுபவர்கள் தம் உறவினர்கள் அதே போரில் இறந்தால் அழுது புலம்புவார்கள். போர் என்பது என்றென்றும் தொடர்ந்து நடக்க முடியாது. அதற்கு ஒரு முடிவு ஏற்பட்டு சமாதானம் என்ற முடிவில் போய்த் தான் நிற்கும். எனவே நாம் சமாதானத்தையே நாடவேண்டும். ஆனுல் இப்போது நாம் போர் புரியவேண்டிய நிலையில் இருப்பதால் அதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். சித்திரவர்ணன் நம்மைவிட பலசாலி நீர்ப்பறவைகளை விட நிலப்பறவைகள் எண்ணிக்கையில் அதிகமானவை. பலசாலியுடன் போராடும் ஒருவன் ஆமை போல நடந்து கொள்ள வேண்டும். சந்தர்ப்பம் கிடைத்த போது பாம்பு போலச் சீறவேண்டும். எனவே நாம் போரைத் தவிர்க்க வேறு ஏதாவது வழி இருக்கிறதா எனப் பார்ப்போம்'' என்றது.






# 5

[சமரசேனன் தன் ஆட்களோடு ஒற்றைக் கண்ணனும் நாலு கண்ணனும் உள்ள தீவை அடைந்தான். அந்த இரு மந்திரவாதிகளும் ஒருவரை மற்றவர் எதிரியாகக் கருதினுர்கள். முதலில் ஒற்றைக் கண்ணனைப் பார்த்து பயந்து ஓடிய சமரசேனனும் அவனது வீரர்களும் நாலு கண்ணனைப் பார்த்தனர். அப்போது....]

குளக்கரையில் ஒளிந்திருந்த சமரசேனனுக்கும் அவனது ஆட்களுக்கும் குளத்தில் பயங்கர உருவில் ஒரு மனிதன் நிற்பது தெரிந்தது. அவன் தலையில் குஞ்சம் வைத்த தொப்பி இருந்தது. அந்தத் தொப்பியின் முன் பக்கம் கண்கள் போன்ற இரு துவாரங்கள் இருந்தன. அவை 'பளிச் பளிச்' சென்று மின்னிக் கொண்டிருந்தன.

அவன் தான் நாலு கண்ணன் என்ற மந்திரவாதி என்றும் ஒற்றைக் கண்ணனின் கடும்பகைவன் என்பதும் சமரசேனனுக்கும் அவனது ஆட்களுக்கும் தெரிந்து போயிற்று. அந்த மந்திரவாதியின் கண்ணில் படாமல் அங்கிருந்து எப்படித் தப்புவது என்பது பற்றியே அப்போது சமரசேனன் யோசித்துக் கொண்டிருந்தான்.



அவனது ஆட்களும் தம்தலைவன் என்ன சொல்லி என்ன செய்யச் சொல்லப் போகிறான் என்றே எதிர்பார்த்து நின்றார்கள். அப் சமரசேனன் ''நாம் இப்போது ஆபத்தான நிலையில் இருக்கிறோம். இரண்டு மந்திரவாதிகள் இருக்கிறார்கள். அவர்கள் ஒருவரை மற்றவர் வெறுக்கிறார்கள். நாம் இவர்களில் யாராவது ஒருவரின் பக்கம் சேர்ந்தாலோ அல்லது உதவியை நாடினாலோ மற்றவனின் பகையைத் தேடிக் கொண்டவர்களாகி விடுவோம். அதனால் யார் பக்கமும் சேராமல் ஒதுங்கி இருக்கவே வேண்டும்'' என்றான். அப்போது வீரர்களில் ஒருவன் ''அப்படி ஒதுங்கி இருந்தால் மட்டும் இவர்களால் நமக்கு தீங்கு ஏற்படாமலா போகப் போகிறது?'' என்று கேட்டான்.

சமரசேனனும் ''ஆபத்து ஏற்படாமல் போகாது. ஆனால் இருவர் பக்கமும் சேராது இருந்தால் ஆபத்து குறைவானதாக இருக்கும். இருவரும் நம்மீது ஆத்திரப் படமாட்டார்கள்!'' என்றான். அது கேட்டு வீரர்களும் சற்று தூரத்தில் நின்ற நாலுகண்ணனைப் பார்க்கலானார்கள்.

அப்போது நாலு கண்ணன் காடே அதிரும்படியாகக் கணீரென்ற குரலில் ''அடே! பைத்தியக்காரப் பயல்களா! ஏன் அப்படி ஒளிந்து கொண்டிருக்கிறீர்கள்?'' அப்படி இருந்து விட்டால் எனக்கு தெரியாமல் போய் விடும் என்ற நினைப்பா? அது தான் இல்லை. இந்தக் காட்டில் ஒவ்வொரு மூலையிலும் முடுக்கிலும் என்ன இருக்கிறது, என்ன நடக்கிறது என்பது எனக்குத் தெரிந்து விடும். என் பார்வை அப்படிப் பட்ட சக்தியை பெற்றது தெரியுமா! ஏய் ஆந்தையே! மனிதக் குரங்கே வாருங்கள்'' எனக் குரல் கொடுத்தான்.

மறுநிமிடமே கருப்பு ஆந்தையும் மனிதக்குரங்கும் ஓடி வந்து சமரசேனனும் அவனது ஆட்களும்

வரவேண்டிய வழியின் குறுக்கே நின்று கொண்டன. மனிதக் குரங்கு ஒரு மரக்கிளையை ஒடித்துக் கையில் எடுத்து வந்திருந்தது. கருப்பு ஆந்தையோ அவர்கள் இருந்த இடத்தின்மேல் உயரப் பறந்து பயங்கரமாக அலறிக் கொண்டு இருந்தது.

இதைக் கண்டு வீரர்கள் பயந்து போனார்கள். சமரசேனன் அவர்களது பயத்தைப் போக்கி உற்சாகப்படுத்த எண்ணி ''பயப்படாதீர்கள். நம்மை நம் குந்தள தேவி கைவிட மாட்டாள். எப்படிப்பட்ட ஆபத்திலிருந்தும் அவள் நம்மைக் காப்பாள். அவளை தியானியுங்கள்'' என்றான். அவர்களும் கண்களை மூடிக்கொண்டு தியானம் செய்யலானார்கள்.

அப்போது நாலு கண்ணன் மெதுவாக அடிமேல் அடி வைத்து அவர்கள் இருக்கும் இடத்திற்கு வந்தான். அவர்களிடம் அவன் சகஜமான குரலில் ''நீங்கள் எல்லாம் யார்? இந்தத் தீவிற்கு எதற்கு வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

அவனது குரலில் கடுமை இல்லாதது கண்டு சமரசேனனுக்கும் அவனது வீரர்களுக்கும் போன உயிர் திரும்பி வந்தது என்றே கூறலாம். சமரசேனனும் உண்மையைக் கூறுவதே நல்லது என





நினைத்து "நாங்கள் குந்தளத் தீவைச் சேர்ந்தவர்கள். கப்பல் பயணத்தின்போது புயலடித்து இங்கு கரையில் தள்ளப்பட்டோம்" என்றான்.

நாலுகண்ணனும் "அப்படியா? குந்தளத்தீவில் இருந்தா வந்திருக்கிறீர்கள்? எங்கே போவதாகக் கிளம்பினீர்கள்? புயல்காற்று உங்கள் கப்பலை இந்தத் தீவின் கரையில் கொண்டு வந்து சேர்த்தது? இப்படி ஒரு கடல் பயணம் மேற்கொண்டது எதற்காகவோ?" என்று கேட்டான். சமரசேனனும் "எங்கள் நாட்டு பொக்கிஷத்தில் பணம் இல்லை. அதற்காகப் பல நாடுகளுக்குப் போய் பணம் சேர்த்து எடுத்து வருவது எனத் தீர்மானித்துக் கப்பலில் கிளம்பினோம்" என்றான்.

அப்போது நாலு கண்ணன் பலமாகச் சிரித்தவாறே "பேஷ் பேஷ். இங்கே பணத்தாசை பிடித்து அலையும் ஒற்றைக்கண்ணன் என்ற மந்திரவாதி இருக்கிறான். அவனுக்கு போட்டியாக நீ வந்திருக்கிறாயா?" என்று கேட்டான்.

சமரசேனனுக்கு அப்போது என்ன பதிலை சொல்வது என்று தெரியவில்லை. ஆனால் காடே அதிரும்படியாக ஒற்றைக் கண்ணன் கொடுத்த குரல் அவனை அந்த இக்கட்டிலிருந்து தப்பவைத்தது. ஒற்றைக்கண்ணன் 'காலநாகா! கராளா!! ஓடி வந்து இங்கே தேடிப்பாருங்கள்" என்று கத்தினான்.

அப்போது சமர சேனன் தன் ஆட்களுக்குச் சைகைசெய்து அவர்கள் ஓடிப்போய் புதர்களின் பின் மறைந்து கொண்டார்கள். சமரசேனனும் அவர்களோடு சேர்ந்து மறைவில் உட்கார்ந்து கொண்டான்.

அவர்கள் ஒற்றைக் கண்ணன் அங்கு வருவதைக் கண்டார்கள். அவனோடு பாம்பும் மண்டை ஓடும் வந்து கொண்டிருந்தன. ஒற்றைகண்ணன் நாலு கண்ணனைப் பார்த்து "ஓ! நாலு கண்ணா!




இங்கேயா இப்போது இருக்கிறுய்? என் கண்ணில் படாமல் இவ்வளவு நாட்களாக எப்படித்தான் திரிந்து கொண்டிருந்தாயோ? ஆனுல் இன்று என் கண்ணில் பட்டுவிட்டாய். வெகு நாட்களுக்குப் பிறகல்லவா பார்க்கிறேன் உன்னை'' என்று கூறியவாறே தன் இடையிலிருந்த கத்தியை எடுத்துக் கொண்டான்.

அவனைக் கண்ட நாலுகண்ணன் சற்றும் அசையாமல் ''ஓ! ஒற்றை கண்ணரா! வாருங்கள் வாருங்கள்!! ஏது இப்படி அபூர்வ விஜயம்?'' என்று ஏளனமாகச் சிரித்தவாறே கேட்டான். ஒற்றைக் கண்ணன் அவனை முறைத்துப் பார்க்கவே நாலுகண்ணனும் ''ஆந்தையே! மனிதக்குரங்கே!! இங்கே வாருங்கள். விருந்தாளிகள் வந்திருக்கிறுர்கள். நல்ல 'விருந்தை' அளியுங்கள் பார்க்கலாம்'' என்றுன். மறுவினுடியே ஆந்தையும் மனிதக்குரங்கும் அங்கு ஓடி வந்தன.

அப்போது நாலு கண்ணன் ''ஆந்தையே! போன தடவை இந்தப் பயலின் வலது கண்ணைக் குத்தி ரசித்துச் சாப்பிட்டாய். இந்தத் தடவை அவனது இடது கண்களை ருசி பார்க்கிறுயா?'' என்றுன். ஆந்தையும் ஒற்றைக் கண்ணை நோக்கிப் பறந்தது.

ஆந்தை தன்னை நோக்கிப்பறந்து வருவது கண்டு ஒற்றைக் கண்ணன் பயந்து அலறினுன்., ஆனுல் அடுத்த வினுடியே தன்னைச் சமாளித்துக் கொண்டு ''கராளா! இந்த ஆந்தையைக் கவ்விப்பிடி'' என்றுன். மண்டை ஓடான கராளனும் தன் பொக்கை வாயைத் திறந்து கொண்டு ஆந்தையைப் பிடிக்க அங்கும் இங்கும் ஆடலாயிற்று.

அதைக் கண்ட நாலுகண்ணன் ''மனிதக்குரங்கே! உன் கைவரிசையைக் காட்டு'' என்று பற்களை 'நற' 'நற'வென்று கடித்தவாறே கூறினுன். மனிதக்குரங்கும் பலமாகக் கத்தியவாறே ஒற்றைக்

கண்ணனைப் பிடிக்கப் பாய்ந்தது. அப்போது ஒற்றைக்கண்ணன் ''காலநாகா! இவனைப் பார்.'' எனவே பாம்பு மனிதக் குரங்கின் உடலைச் சுற்றிக் கொள்ளலாயிற்று. இப்படியாக ஆந்தையோடு மண்டைஓடும், மனிதக் குரங்கோடு கால நாகனும் சண்டை போடலாயின.

சமரசேனனும் அவனது வீரர்களும் அந்த பயங்கரச் சண்டையைக் கண் கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மண்டை ஓடு தன் பொக்கை வாயைத் திறந்து கருப்பு ஆந்தையை பிடிக்க முயன்று கொண்டிருந்தது. ஆந்தை அதனை அங்கும் இங்குமாக அலையவைத்துக் கொண்டும் கத்திக் கொண்டும் திரிந்தது. மனிதக் குரங்கும் கால நாகனும் ஒருவர் மற்றவரைப் பிடித்து முறுக்கிக் கொண்டிருந்தார்கள்.

இப்படி நடக்கும் சண்டையை நாலு கண்ணனும் ஒற்றைக் கண்ணனும் கொஞ்சநேரம் வரை பார்த்து நின்றார்கள். அதற்கு ஒரு முடிவே ஏற்படாது போலிருந்தது.

அப்போது நாலு கண்ணன் பலமாகச் சிரித்துத் தன் தலைமீது இருந்த தொப்பியை உயரத்தூக்கி ''ஓம் ஹ்ரீம் க்ரீம்...'' என சில




மந்திரங்களை உச்சரித்தான். மறு நிமிடமே அவன் மாயமாக மறைந்தான். கருப்பு ஆந்தையும் மனிதக் குரங்கும் கூட மாயமாக மறைந்து போயின.

ஒற்றைக் கண்ணன் அது கண்டு திகைத்தான். ஆனாலும் ''அடே பயங்கொள்ளி! மாயமாகவா மறைந்தாய்? இந்தத் தடவை யாவது நேருக்கு நேர் நின்று நீ என்னுடன் சண்டை போடுவாய் என்று எதிர் பார்த்தேன். ஆனால் நீ அப்படிச் செய்யவில்லை. நம் ஆட்கள் தாம் ஒருவரோடு ஒருவர் மோதிக் கொண்டார்களே யொழிய நாம் கைகலக்கவில்லையே. இதற்குள் நீ மாயமாகி விட்டாயே.

இப்படி எவ்வளவு நாட்கள் தான் நீ தப்பப் போகிருயோ பார்க்கிறேன்'' என்று ஆத்திரத்தோடு கைமேல் கையைக் குத்தியவாறே அவன் கூறிஞன். பிறகு கொஞ்ச நேரம் வரை ஏதோ யோசித்த வாறே நின்ருன்.

சமரசேனனும் அவனது ஆட்களும் புதர் மறைவிலிருந்து அவன் செய்வதை எல்லாம் பார்த்தார்கள். ஆஞல் ஒற்றைக் கண்ணஞல் அங்கே ஒளிந்திருப்பவர்க்ளை பார்க்க முடியவில்லை. அவன் காலநாகனேயும் கராளனேயும் அழைத்துக் கொண்டு தன் கத்தியைச் சுழற்றியவாறே சுற்றிலும் ஒரு முறைப் பார்த்தான். அவனுக்கு ஆந்தை இன்னமும் அங்கேயே இருக்கிறது என்ற பயம் வேறு. ஒரு முறை தன் இடது கண்களைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். அந்தக் கண் இருக்கத்தான் இருந்தது. ஆந்தை தின்று விடவில்லை.

ஆஞலும் அவன் மிரள மிரளச் சுற்றிலும் பார்த்துக் கொண்டே அங்கிருந்து தன் சகாக்களான காலநாகனேயும் கராளனேயும் அழைத்துக் கொண்டு சென்ருன். அவர்கள் வெகு தூரம் போனபின் சமரசேனனும் அவனது ஆட்களும் தாம் மறைந்திருந்த இடத்திலிருந்து வெளியே வந்தார்கள்.

இனி சட்டெனக் கிழக்குக் கடற்கரைக்குப் போய்விட வேண்டும் என சமரசேனன் கூறி வீரர்களோடு கிளம்பிஞன். சிறிது தூரம் போனதும் தரையேவெடிப்பதுபோன்ற சத்தம் கேட்டு அவர்கள் திடுக்கிட்டு நின்ருர்கள். அப்போது சற்று தூரத்திலுள்ள எரிமலே வெடித்து நெருப்பையும் புகையையும் கக்கியது நெருப்புக் குழம்பாக மலே உச்சியிலிருந்து வழிந்தது. அடர்ந்த புகை வேறு வழியை மறைத்தது. அவர்கள் இதைக் கண்டு திகைத்தார்கள்.

(தொடரும்)






# வாயால் கெடாதே!

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னா! நீ உறுதியாக இருந்து ஒரு வேலையைச் செய்ய முயல்கிறாய். சிலரது உறுதி தளர்ந்து போய் விடும். இதற்கு உதாரணம் வீரமணி. அவன் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

வீரமணி சாதாரண குடும்பத்தில் பிறந்திருந்தாலும் வாய்த்துடுக்கு அதிகம் கொண்டவன். யாரையும் கண்டபடி ஏசி விடுவான். ஊரார் அவனது வாய்க்

## வேதாளம் சொல்லும் கதை



குப் பயந்து கொண்டே இருந்தனர். அவனுடைய மனைவியோ மிகவும் பொறுமை உள்ளவள். கணவன் காரணமில்லாமல் திட்டினாலும் பொறுத்துக் கொண்டு பேசாமல் இருந்து விடுவாள். ஆனால் வீரமணி தன் மனைவி எல்லாவற்றைச் சகித்துக் கொண்டாலும் கூட வாய்த் துடுக்காகப் பேசுவதை நிறுத்தவில்லை.

இப்படித் தன்தங்கை கணவனிடம் பேச்சுவாங்குவது கண்டு அவளது அண்ணன் சம்பத்து வீரமணியைத் திருத்த எண்ணினான். எனவே ஒரு பயில்வானை அவன் வீரமணியின் ஊருக்கு அனுப்பினான். பயில்வானும் வீரமணியின் ஊருக்கு வந்து தன்னோடு குத்துச் சண்டை போட யாராலாவது அந்த ஊரில் முடியுமா என்று சவால் விட்டான்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த வீரமணி தன் வழக்கம் போல ''அடேயப்பா! பயில்வானும். இந்த ஊரில் குஸ்தி போடுபவன் யாருமே இல்லை என்பதை முன் கூட்டியே தெரிந்து கொண்டு இந்த ஊருக்கு வந்து சவால் விடுகிறான் பார்! இவன் கையாலாகாதவன். தற்பெருமைக்காரன்'' என்று அங்கு கூடி இருந்தவர்களிடம் உரக்கக் கூறினான்.

அது பயில்வானின் காதில் விழுந்தது. உடனே அவன் ''யாரடா அவன் என்னைக் குறை கூறுவது? என் எதிரில் வந்துநின்று தைரியமாகச் சொல் பார்க்கலாம்'' என்றான். வீரமணியும் பயில்வான் முன் வந்து ''நான் தான் சொன்னேன். என்னடா செய்து விடுவாய்?'' என்று வழக்கம் போலத் துடுக்குத்தனமாய் கேட்டான்.

பயில்வானும் ''என்ன செய்கிறேன் என்று பார்'' எனக் கூறி அவன் கையைப் பிடித்துத் திருகி முதுகில் நான்கு குத்துகளை விட்டான். அவ்வளவுதான். அவன் கை எலும்பு முறிந்தது. வீட்டிற்குப் போய் படுத்தவன் நான்கு

நாட்களுக்கு எழுந்திருக்க முடியா மல் கிடந்தான்.

அவனைக் காண வந்த அவனது மைத்துனன் சம்பத்து ''பார்த் தாயா வாய்த்துடுக்கினால் என்ன அவஸ்தை என்று.'' என்றான். வீர மணியோ ''அடி வாங்கினால் என்ன? என் மதிப்பு குறைந்தா விட்டது? இல்லவே இல்லை. நீயே பார். அந்த பயில்வானை எதிர்த் துப் பேசியவன் இந்த ஊரில் நான் ஒருவன் தானே. வேறுயாரும் இல்லையே'' என்றான். அது கேட்டு சம்பத்து தன் மைத் துனனைத் தன்னால் திருத்த முடி யாது என எண்ணி அந்த முயற்சி யைக் கைவிட்டான். ஒரு நாள் வீரமணி வீட்டில் இல்லாத போது ஒரு யோகி அவனது வீட்டிற்கு வந்தார். அவரை உபசரித்து வீர மணியின் மனைவி அவருக்குச் சாப் பாடு போட்டாள். அவர் சாப் பிட்டுக் கொண்டிருந்த போது வீரமணி வீட்டிற்கு வந்தான்.

அவன் யோகியைப் பார்த்து ''இந்த மாதிரி சாப்பிடவா காவி உடை போட்டு ஊரை ஏமாற்றித் திரிகிறாய்? உன்னைப் போன்றவர் களை நடுச் சந்தியில் நிறுத்தி குதி ரைச் சவுக்கால் நாலு வாங்கு வாங்க வேண்டும்'' என்றான்.

யோகியும் ''நான் எல்லோரை யும் ஏமாற்றும் கபட சன்னியாசி அல்ல. சக்தி வாய்ந்தவன். இதைத் தெரிந்து கொள்ளப்பா'' என்றார். ''ஓகோ! அப்படி என்ன





சக்தி உன்னிடம் இருக்கிறதபபா காவி வேட்டி?'' என்று அவன் சொல்லி ஏளனமாகச் சிரித்தான்.

மறு நிமிடமே அவர் ஏதோ மந்திரம் கூறிக் கையை ஆட்ட அவர் அணிந்திருந்த காவி உடைகள் அரசனின் உடைகளாக மாறின. அதைக் கண்ட வீரமணி திகைத்துப் போனுன். யோகியும் ''இப்போது முதல் நீ யாரைத் திட்டினுலும் அது அவனுக்கு வாழ்த்தாகவே மாறும்" எனக்கூறி விட்டு அங்கிருந்து போய்விட்டார்.

அப்போது முதல் வீரமணி யார் மீது கோபம் கொண்டு எரிந்து விழுந்தாலும் அவனுடைய வசைவுகள் வாழ்த்துக்களாக மாறின. ஒருவனைப் பார்த்து 'நாசமாய்ப் போ' என்ருல் அவன் சுகமாக வாழலானுன். 'உன் பயிர் கருகிப் போகட்டும்' என்ருல் அவனது பயிர் நன்கு விளைந்தது. 'உன் வியாபாரத்தில் மண் விழ' என்ருல் அவனுக்கு அமோக லாபம் கிட்டலாயிற்று.

அது கண்டு வீரமணி திகைத்தான். தான் கூறுவதற்கு நேர் மாருக நடப்பது கண்டு அவன் யோசித்துப் பார்த்துத் தனக்கு வேண்டியவர்களைத் திட்டினுன். வேண்டாதவர்களை வாழ்த்தினுன். ஆனுல் அப்போது நேர் மாருன விளைவுகள் ஏற்படவில்லை. வீரமணி தான் தன் இயல்பை எவ்வப்போது மாற்றிக் கொண்டு பொறுமையைக் கடைப் பிடிக்க வேண்டியதாயிற்று. இப்படியே அவன் தொடர்ந்து செய்ய வேண்டி வரவே அவனது வாய்த் துடுக்கு மறைந்து விட்டது.

இப்படியே அவன் மாறி விட்டான். இந்த மாறுதல் அவன் மனைவிக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளித்தது. வீரமணியின் வாய்த் துடுக்கும் போய் எல்லோரையும் போல அவன் ஆகிவிட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னு! வீரமணி யோகியாரின் சக்தியால் மாறியது தெளிவாகிறது. அவர் கூறியபடி வீரமணி

திட்டியதற்கு நேர்மாருக நடந்த தால் அவனது வாய்த் துடுக்குத் தனம் எப்படிப் போயிற்று? இதற் குச் சரியான விடை தெரிந்திருந் தும் நீ கூரு விட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூருகிவிடும்'' என்றது.

அப்போது விக்கிரமனும் ''சாதாரணமாக ஒரு மனிதன் ஆத்திரப்பட்டுத் திட்டினுல்அதன் படியே நடக்க வேண்டும் எனத் தான் எதிர்பார்ப்பான். யோகி தன் சக்தியால் அவன் ஆத்திரப் பட்டுப் பிறரைத் திட்டினுல் அதற்கு நேர்மாருன பலன் ஏற் பட வேண்டும் எனக் கூறியதால் வீரமணி தான் கூறியதற்கு நேர் மாருக நடப்பது கண்டு திகைத் துப் போனுன். அவன் தனக்கு வேண்டியவர்களைத் திட்டிய போது ஆத்திரப்பட்டுத் திட்ட வில்லை. அதுபோல வேண்டாத் வர்களை வாழ்த்தியபோதும் முழு மனதோடு வாழ்த்தவும் இல்லை. எனவே இம்மாதிரி அவன்முயன்ற போது அவன் எதிர்பார்த்தபலனை அளிக்கவில்லை. வாய்த் துடுக்கு உள்ளவனுக்கு எதிராளி ஆத்திரம் மூட்டும் வகையில் நடந்தால் ஆத் திரம் வந்து திட்டுவான். அப் படித் திட்டியதால் எதிராளிக்கு நன்மை ஏற்பட்டால் அவன்மனம் ஒடிந்து தானே போகும்? எனவே அவன் மனம் தன் இயல்பைவிட்டு யோசித்து நிதானத்தை அடைய லாயிற்று. இந்த மாற்றம் கொஞ் சம் கொஞ்சமாக வீரமணியின் மனதை மாற்றி நாளடைவில் எல்லா மனிதர்களும் நடந்து கொள்வது போலப் பொறு மையைக் கடைப்பிடிக்கச் செய்து விட்டது'' என்ருன்.

விக்கிரமனின் சரியான பதி லால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உட லோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தின் மீது ஏறிக் கொண்டது.





# யாருக்கு சன்மானம்?

ஒரு கிராமத்தில் தண்ணீர்ப் பஞ்சம் ஏற்படவே மன்னன் அது பற்றி கேள்விப் பட்டு அவ்வூரின் குளத்திலிருந்து தூர் வாரி ஆழமாக வெட்டி ஊற்று சுரக்க வழி செய்யுமாறு தன் மந்திரியிடம் கூறினான்

மந்திரி நீர்ப்பாசனத் தலைமை அதிகாரியிடம் கூற, அந்த அதிகாரி மாவட்ட அதிகாரியிடம் கூற, மாவட்ட அதிகாரி கோட்ட அதிகாரியிடம் கூற முடிவில் கோட்ட அதிகாரி கிராம மணியகாரருக்கு உத்திரவு போட்டார். குளமும் சரி செய்யப்பட்டு மக்களுக்கு நீர் கிடைத்தது.

அப்போது மன்னன் ''அந்த கிராமத்துக் குளம் செப்பனிட்டதில் பல தில்லுமுல்லுகள் நடந்திருக்கின்றனவாமே. யார் அப்படிப் பணத்தைக் கையாடினார்கள்?'' என்று கேட்டான். மந்திரி நீர்பாசன அதிகாரி மீது பழி போட அந்த அதிகாரி மாவட்ட அதிகாரி மீதும் மாவட்ட அதிகாரி கோட்ட அதிகாரி மீது பழி சுமத்த கோட்ட அதிகாரி முடிவில் கிராம மணியகாரர் மீது குற்றம் சாட்டி அவர் தான் அந்த வேலை செய்ததற்கு பொறுப்பை ஏற்றவர் என்றான்.

அப்போது அரசன் ''இந்த வேலை நன்கு நடந்திருக்கிறது. இதற்கு யார் பொறுப்பு என்று காணவே இப்படி நான் ஒரு வழி செய்தேன். நீங்களே முடிவு சொல்லி விட்டீர்கள்'' எனக் கூறி அந்த கிராம அதிகாரியை அழைத்து கௌரவித்துப் பரிசளித்து பாராட்டினான்.






# நிழலின் அருமை

மருதாசலம் அந்த ஊரிலேயே பணக்கார விவசாயி. அவனது மகன் கதிர்வேலு. அவனும் உயர் படிப்புப் படித்துவிட்டு வீடு திரும்பினான். தந்தை தன் விவசாயத்தை மகனிடம் ஒப்படைக்க நினைத்தான்.

ஆனால் கதிர்வேலுவுக்கு விவசாயம் செய்ய இஷ்டமில்லை. ஏதாவது வியாபாரம் செய்து லட்சலட்சமாகச் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசை. எனவே அவன் தந்தையிடம் ''விவசாயத்தில் அதிக மழை பெய்தாலும் நஷ்டம். மழை இல்லா விட்டாலும் நஷ்டம்'' எனக் கூறி வியாபாரம் செய்யப்போவதாகச் சொன்னான்.

மறுநாள் கதிர்வேலு அவ்வூரின் மிகப் பெரிய பஞ்சு வியாபாரியிடம் போய் வியாபாரம் பற்றிக் கேட்டான். அவனோ பெருமூச்சு விட்டவாறே ''நீ வியாபாரத்தில் இறங்காதே. அப்படி ஒன்றும் பிரமாத லாபம் வந்து விடாது. இதில் போட்டி, பொறாமை என்றெல்லாம் தலை தூக்கும். வியாபாரிக்கு நஷ்டமும் ஏற்படும். அவனுக்கு என்றுமே மன நிம்மதி கிடையாது. சுகமும் கிடையாது'' என வியாபாரத்தில் உள்ள கஷ்ட நஷ்டங்களை விவரமாகக் கூறினான்

அதைக் கேட்ட கதிர்வேலு வியாபாரம் செய்யும் ஆசையை விட்டு விட்டான். பிறகு அவன் பட்டணத்திற்குப் போய் அரசாங்கத்தில் மிக உயர் பதவியிலுள்ள ஒரு அதிகாரியைக் கண்டு தனக்கு ஏதாவது ஒரு அரசாங்க வேலை நல்லதாக வாங்கிக் கொடுக்கும்படி வேண்டினான்.

அந்த அதிகாரியும் ''தம்பீ! உனக்கோ நிறைய நிலபுலன்கள்

ஆனை. கணபதிசுந்தரம்

இருப்பதாகக் கூறுகிருய். பேசாமல் விவசாயம் செய். அரசாங்க வேலைக்கு ஆசைப்பட்டால் இல்லாத கஷ்டங்களை அனுபவிக்க வேண்டும். நீ சுதந்திரமாகச் செயல்பட முடியாது. எப்போதும் உயர் அதிகாரி சொல்வதற்கு 'ஆமாம்' போட்டுக் கொண்டிருக்கவேண்டும். மானம், ரோஷம் முதலியவற்றைக் காற்றில் பறக்க விட வேண்டும். அரசியல்வாதிகள் ஆட்டி வைக்கிறபடி ஆட வேண்டும். யாராவது ஏதாவது புகார் உன்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருப்பார்கள். இதில் சுகமே இல்லை. கஷ்டம்தான். எனவே பயிர்த் தொழிலை மேற்கொள். உனக்கு எதற்கு இந்தத் தலைவலி?'' என்று கூறி அனுப்பினார்.

கதிர்வேலுவும் முகத்தைத் தொங்கப் போட்டவாறே தன் ஊருக்கு வந்து தந்தையிடம்தான் சந்தித்தவர்கள் கூறியதைஎல்லாம் சொன்னான். மருதாசலமும் ''இந்தக் கஷ்ட நஷ்டங்கள் விவசாயத்தில் மட்டுமே இருப்பதாக நீ எண்ணினாய். ஆனால் நீயே போய் விசாரித்து எல்லாத் தொழில்களிலும் கஷ்ட நஷ்டங்கள் உள்ளன என்று தெரிந்து கொண்டு வந்திருக்கிருய். உண்மையில் கஷ்டம் உள்ள இடத்தில் சுகமும் இருக்கும். லாபம் உள்ள இடத்தில் நஷ்டமும் இருக்கும். எதிலும் முழு சுகம் என்பதோ முழுக் கஷ்டம் என்பதோ கிடையாது. எல்லாம் கலந்தே வரும். இவற்றைச் சமாளிக்கும் சக்தி ஒருவனிடம் இருந்து தான் செய்யும் வேலையில் பிடிப்போடு இருக்க வேண்டும்'' என்ருன்.

தன் தந்தை கூறியதே சரிஎனக் கதிர்வேலு நினைத்து விவசாயத்தில் முழுமூச்சுடன் இறங்கி அதில் நல்ல தேர்ச்சியும் அனுபவமும் பெற்றுத் திருப்தியுடன் வாழ்ந்து வரலானன்.



# அறிவு வந்தது!

**கோ**விந்தனின் தந்தை தன் சொத்தை எல்லாம் விற்று உயர் கல்வியை அளித்தார். கோவிந்தனும் நன்கு படித்து அறிவாளி எனப் பெயர் பெற்று அரசாங்கத்தில் உயர் பதவியையும் பெற்ருன். அவன் பணக்காரக் குடும்பத்துப் பண்புடைய பெண் ஒருத்தியை மணந்து இல்வாழ்க்கை நடத்தி வந்தான். ஆனல் அவன் கிராமத்திலிருந்த தன் தாய் தந்தை யரைப் பற்றிக் கொஞ்சம் கூடக் கவலைப்படவில்லை. அவர்களைப் போய்ப் பார்க்கவும் இல்லை.

கோவிந்தனுக்கும் ஒரு மகன் பிறந்து வளர்ந்தான். அவனுக்கு உயர் கல்வி அளிக்க வேண்டும் என அவன் தன் மனைவியிடம் கூறவே அவளோ ''வேண்டாம். இவனும் உயர் கல்வி பெற்ருல் உயர் பதவி பெற்று உயர் குடும்பப் பெண்ணை மணந்து கொண்டு விடுவான். அதன் பிறகு அவன் தன் மனைவியின் வீட்டிலேயே தங்கி தன் தாய் தந்தையர்களையே மறந்து விடுவான்'' என்ருள்.

கோவிந்தன் சாட்டை அடிபட்டவன் போலானுன். அவன் மனைவி யின் சொற்கள் நல்ல புத்தியைப் புகட்டின. மறுநாளே தன் கிராமத்திற் குப் போய் அவன் தன் தாய் தந்தையரைத் தன்னேடு தலை நகருக்கு அழைத்து வந்து விட்டான்.





# நேர்மை தரும் பரிசு

ராமசாமி ஒரு நகைக் கடையில் நம்பிக்கைக்கு ஆளாகப் பணியாற்றி வந்தான். அவனது எஜமானன் பங்காருவும் அவனை நம்பிக் கடையை விட்டு விட்டுப் போவார். ராமசாமி கடையிலுள்ள ஒரு துரும்பைக் கூட எடுக்க ஆசைப்பட மாட்டான்.

ராமசாமி தன் பெண்ணிற்குக் கல்யாணம் செய்ய விரும்பித் தன் முதலாளியிடம் கடன் கேட்டான். பங்காருவோ ஏதோ சாக்கு சொல்லி கடன் கொடுக்க மறுத்து விட்டார்.

ஒரு நாள் நடுப்பகல். உணவு வேளைக்காகக் கடை சாத்தும் வேளை. கடையில் உள்ள எல்லா சிப்பந்திகளும் போய் விட்டார்கள். ராமசாமி மட்டும் இருந்தான். அப்போது அமர்சந்த் என்பவன் வந்து ராமசாமியிடம் இருபதாயிரம் பெறுமான வைர மாலையை வாங்கினான். அதில் உடனேயே தன் பெயரை பதிக்கவும் செய்து வாங்கித் தன் பையில் போட்டுக் கொண்டான்.

ராமசாமி அவனிடமிருந்து பணம் பெற்று பெட்டியில் வைத்தான். அமர்சந்தும் கடையிலிருந்து சென்றான். ஆனால் ராமசாமி கடையைப் பூட்டியபோது அங்கு ஒரு பை இருப்பது கண்டு எடுத்து பார்த்தான். அது அமர்சந்தின் பை. அப்போது அவன் அமர்சந்திற்கு விற்ற வைர மாலையும் அதில் இருந்தது.

அமர்சந்த் பையைத் தவற விட்டுப் போய் விட்டான் என ராமசாமி கண்டான். அப்போது அவன் மனம் கெட்ட யோசனையில் இறங்கியது. இந்த மாலையை இப்போதே திருட்டு நகைகள் வாங்

திருவை ஆறுமுகம்

கும் திருமலையிடம் கொடுத்தால் தன் பெண்ணின் கல்யாணத்திற்குப் போதிய பணம் கிடைக்கும் என அவன் மனம் எண்ணியது, உடனே அந்தப் பையை எடுத்துத் தன் இடுப்பில் சொருகிக் கொண்டு கடையைப் பூட்டினான். பிறகு ஜனநெருக்கமுள்ள கடைத்தெருவில் போய் திருமலைசாமியின் கடைக்குப் போனான். அங்கு வாசற்படியில் கால் வைத்து தன் இடுப்பைத் தொட்டுப் பார்த்த போது சொருகப்பட்ட பை இல்லாதது கண்டு ராமசாமி திடுக்கிட்டான். அவன் அந்தப் பையில் தன் சம்பளப் பணத்தையும் போட்டிருந்தான். இப்போது நகையோடு அந்தப் பணமும் போய் விட்டது.

அவன் மறுபடியும் கடைக்கு வந்தான். ஒரு வேளை பை கடைக்குள்ளேயே இருக்கிறதோ என எண்ணிக் கடையைத் திறந்து தேடிப் பார்த்தான். எங்கும் இல்லை. இதே சமயம் அமர்சந்த் அங்கு வந்தான்.

அவனைக் கண்டதும் ராமசாமி நடுநடுங்கிப் போனான். ஆனால் அமர்சந்த் தன் பையை எடுத்து ராமசாமியிடம் காட்டி "இந்தப் பையை நான் இங்கிருந்து கொண்டு போனபோது வழியில் தவற விட்டுவிட்டேன். வீடு





போனதும் அது தெரியவே கடைத் தெருமுழுவதும் தேடினேன். எல்லோரிடமும் கேட்டேன். இருபதாயிரம் போவதென்றால் கொஞ்சமா நஞ்சமா? இந்த நகை நீங்கள் கொடுத்த தங்கநகைதானா பாருங்கள். பையை ஒரு பையன் திருப்பிக் கொண்டு வந்து கொடுத்தான். அவன் இதனை வழியில் கண்டெடுத்தானாம். ஒரு வேளை நகையை யாராவது எடுத்துக் கொண்டு அதற்கு பதிலாகப் போலி நகையை வைத்து எறிந்து விட்டுப் போயிருந்தாலும் போயிருக்கலாம் அல்லவா?'' என்றான்.

ராமசாமிக்குப் போன உயிர் திரும்ப வந்தது. நகையை வாங்கி

உரை கல்லில் உறைத்துப் பார்த்து விட்டு. ''ஆகா! சுத்தமான தங்கமே அது மட்டுமல்ல நான் உங்கள் நகையில் பெயரைப் போட்டுக் கொடுத்தேனே. நினைவில்லையா? அது கூட இதோ இருக்கிறது பாருங்கள்'' என்ருன். அமர்சந்தும் ''ஆகா! அப்படியா! அந்தப் பையன் நேர்மையானவன். என் வீட்டில் இருக்கச் சொல்லி வந்தேன். அவனுக்கு ஆயிரம் ரூபாய் பரிசு கொடுத்து அனுப்புகிறேன்'' என்று கூறி விட்டுப் போனுன்.

ராமசாமியும் தான் கேடு நினைத்ததற்குத் தண்டனையாகத் தன் சம்பளத்தை இழந்தாகி விட்டது என எண்ணி அந்த மாதச் செலவிற்கு இனி என்ன செய்வது என்று கவலைப்பட்டவாறே கடையைப் பூட்டிக் கொண்டு சாப்பாட்டிற்குத் தன் வீட்டிற்குப் போனுன்.

அப்போது அவன் மகனும் ஓடி வீட்டிற்குள் வந்து ''அப்பா. நீங்கள் சாப்பாட்டிற்கு வர நேரமாகி விட்டதால் என்ன காரணம் என்று பார்க்க உங்கள் கடைக்கு வந்தேன். அப்போது கடை பூட்டி இருந்தது. கடை வாசலில் ஒரு பை கீழே விழுந்து கிடந்தது. அதைத் திறந்து உள்ளே இருந்த நகையைப் பார்த்தேன் அதிலிருந்த நகையில் அமர்சந்த் என்று இருந்தது. கடைத்தெருவில் அமர்சந்த் தான் இழந்த பை பற்றி விசாரித்தது எனக்குத் தெரிந்தது. அவர் வீட்டைத் தேடிப் போய் பையைக் கொடுத்தேன். அவர் என் நேர்மையைப் பாராட்டி எனக்கு ஆயிரம் ரூபாய் பரிசளித்தார்'' என்று பணத்தைத் தன் தந்தையிடம் கொடுத்தான்.

ராமசாமியும் ''ஆமாம். நேர்மைக்கு என்றுமே பரிசு. நேர்மை இல்லாவிட்டால் தண்டனைதான்'' எனக் கூறினுன். அது உண்மையே என்பது அவன் விஷயத்திலேயே தெரிந்து விட்டதே.






# தண்ணீர் ஊற்று

பிரம்மதத்தன் முன்பு காசியை ஆண்ட போது போதிசத்வர் சாதவாகன வம்சத்தில் பிறந்து வளர்ந்து பெரியவராகி ஐநூறு வண்டிகளை வைத்துக் கொண்டு வியாபாரம் செய்து வந்தார்.

ஒரு முறை அவரது குழு ஒரு பாலைவனப் பகுதியை அடைந்தது. அது அறுபது மைல் நீளமானது. பொடிமணல். சூடேறினால் காலைப் பொசுக்கி விடும். பகல் வேளையில் நெருப்பாய் கொதிக்கும் அந்தப் பாலைவனம் இரவில் சட்டெனக் குளிர்ந்துவிடும். நடுப் பகலின் போது அந்தப் பாலைவனத்தில் செல்லவே முடியாது.

எனவே அங்கு செல்லும் பயணிகள் தமக்கு வேண்டிய உணவு பொருள்களையும் குடிநீரையும் உடன் எடுத்துச் செல்வார்கள். கூடியவரையில் இரவில் பயணம் செய்து அந்தப் பாலைவனத்தைக் கடக்க முயல்வார்கள். இரவில் திசை காட்ட நட்சத்திரங்களே அவர்களுக்கு உதவும்.

ஒரே இரவில் அந்தப் பாலைவனத்தைக் கடக்க முடியாவிட்டால் மறு நாள் காலையில் வண்டிகளை வட்ட வடிவில் நிறுத்தி மேலே கெட்டித் துணிகளைக் கட்டி அதன் நிழலில் பயணிகளும் மாடுகளும் தங்க ஏற்பாடு செய்து கொள்வார்கள். அங்கேயே நீர் குடித்தும் சாப்பிட்டும் அன்றையப் பகல் பொழுதைப் போக்கிவிட்டு மாலையானதும் மீண்டும் பயணத்தைத் துவக்குவார்கள்.

அவர்கள் தம்மோடு போதிய அளவு நீரை எடுத்துப் போய் வந்ததால் அவர்களுக்கு எவ்வித சிரமமும் தோன்றாமல் இருந்து வந்தது.



போதிசத்வரும் இம்மாதிரியே பயணம் செய்து ஐம்பது மைல் தூரத்தைக் கடந்து விட்டார். இன்னும் கொஞ்ச தூரமே இருந்ததால் ஒரு இரவில் கடந்து போய் விடலாமென எண்ணி தம்மிடம் மிகுந்த உணவையும் நீரையும் கொட்டி விட்டு பயணத்தைத் தம் குழுவுடன் துவக்கினுர்.

முதலில் செல்லும் வண்டியில் இருப்பவன்தான் நட்சத்திரங்களைப் பார்த்து திசை அறிந்து செல்லக்கூடியவன். மற்ற வண்டிகள் அவனது வண்டியின் பின்னுல் செல்லும். மாலை கிளம்பிய அவன் சற்று நேரத்தில் தன்னையும் அறியாமல் தூங்கிவிட்டான்.

அதனுல் அவனது வண்டி சற்று வளைந்து போய் பாதையை விட்டுத் திரும்பி மீண்டும் பாலைவனத்திற்குள்ளாகவே போகலாயிற்று. அதைப் பின்பற்றி மற்ற வண்டிகளும் சென்றன. முதல் வண்டிக்காரன் விடியும் வேளைக்குத்தான் கண் விழித்தான். அப்போது நட்சத்திரங்களைப் பார்த்து விட்டு தன் வண்டி போக வேண்டிய திசையில் போகாமல் நேர் எதிராக வந்த வழியே பாலைவனத்திற்குள் போய்க் கொண்டிருப்பதைக் கவனித்தான்.

உடனே அவன் தன் வண்டியைத் திருப்பி ''எல்லோரும் வண்டிகளைத் திருப்புங்கள். நாம் மறுபடியும் பாலைவனத்திற்குள்ளே வந்து விட்டோம்'' என்ருன். வண்டிகளை எவ்வளவு வேகமாக ஓட்டியும் அவர்களால் பாலைவனத்தைக் கடக்க முடியாமல் முதல் நாள்காலையில் தங்கிய இடத்திற்கே தான் போய்ச் சேர முடிந்தது. அங்கேயே தங்கி விடலாம். ஆனுல் குடிக்க நீரே இல்லையே.

வண்டிகளை வட்ட வடிவில் நிறுத்தி கூடாரம் போடப்பட்டது. ஆனுல் அன்று பகல் முழுவதும் எல்லோரும் அங்கே தங்கி இருக்க வேண்டும். வண்டி மாடுகளும் இருக்கவேண்டும். இவர்களுக்கு எல்லாம் குடிக்க நீரும் உணவு

தயாரிக்க நீரும் தேவையே. என்ன செய்வது? எனவே கவலையுடன் இளம் வெயிலில் போதிசத்வர் சுற்றிப் பார்க்க சற்று தூரத்தில் தர்ப்பைப்புல் அடர்ந்து வளர்ந்து இருந்ததைக் கண்டார். நிலத்துள் ஈரப்பசை இருந்தால்தானே அந்தப் பாலைவனத்தில் புல் வளர முடியும் என எண்ணி அந்த இடத்தைத் தோண்டச் சொன்னார். எல்லோருமாகச் சேர்ந்து தோண்டினார்கள். இருபது அடி தோண்டியதும் பாறை தென்பட்டது.

இனி தண்ணீர் எங்கே இருக்கும் என எல்லோரும் சந்தேகப்பட்டார்கள். போதிசத்வரோ பாறை மீது காது வைத்துக் கேட்டு விட்டு ''இதன் அடியே நீர் இருக்கிறது. இதனைப் புரட்டி நகர்த்துங்கள்'' என்றார்.

பலருக்கும் அங்கே தண்ணீர் இருக்குமா என்ற சந்தேகமே ஏற்பட்டது. பாறை மிகப் பெரிதாக இருந்து அசைந்து கொடுக்காவிட்டால் என்ன செய்வது என்றும் கூறினார். ஆனால் போதிசத்வரோ ''முயன்றால் முடியாதது எதுவும் இல்லை''. என்று கூறி பாறையை நகர்த்தச் சொன்னார்.

அந்தக் கல்லைப் பெயர்த்து ஒருவன் நகர்த்தவே அந்த இடத்திலிருந்து தண்ணீர் பீறிட்டு பனை உயரத்திற்குப் போய் கீழே விழுந்தது. எல்லோரும் மகிழ்ந்து போய் முதலில் தம் தாகத்தைத் தணித்துக் கொண்டு நீரைப் பாத்திரங்களில் எடுத்துப் போனார்கள். அதன் பின் கூடாரத்தில் சமையல் தயாராகியது. எல்லோரும் சாப்பிட்டு விட்டு மாலையானதும் அங்கிருந்து கிளம்பி நேர் வழியில் சென்றனர். தண்ணீர் வந்த இடத்தில் போதிசத்வர் ஒரு கம்பத்தை நாட்டினார்.

அயல் நாட்டில் தம் சரக்குகளை நல்ல லாபத்திற்கு விற்று போதிசத்வர் ஊர் திரும்பி வந்து தான தர்மங்களைச் செய்து சுகமாக வாழ்ந்தார்.



# கடுகு உபதேசம்

ஒரு நாள் யசோதரை தன் மகனை ராகுலனிடம் "நீ உன் தந்தையிடம் போய் அவரது ஆபரணங்கள் எங்கே இருக்கின்றன எனக் கேட்டு வாங்கு. உன் தந்தையின் சொத்து உனக்குத் தானே சேர வேண்டும்" என்று கூறினாள். ராகுலனும் புத்தரைக் காணப் புறப்பட்டான்.

அவன் புத்தரை அணுகி "அப்பா, உங்கள் சொத்தை எனக்குக் கொடுங்கள்" என்று கேட்டான். புத்தரும் புன்னகை புரிந்தவாறே "என் சொத்து என் ஞானம்தான். அதனையே உனக்குக் கொடுக்கிறேன்" எனக் கூறி தன் முக்கிய சீடர்களில் ஒருவனான சாரிபுத்திரனிடம் ராகுலனுக்குச் சன்னியாசம் அளிக்குமாறு கூறினார்.





இதை அறிந்த சுத்தோதனன் மிகவும் மனம் வருந்தி புத்தரிடம் போய் "என் சகோதரனின் மகன் ஆனந்தனையும் உங்கள் சீடனாக்கிக் கொண்டு விட்டீர்கள். இப்போது என் பேரனையும் துறவியாக்கி விட்டீர்களே. இனி எனக்கு யார் இருக்கிறார்?" என்று கேட்டான். அது முதல் புத்தர் எந்த வாலிபனாவது சீடனாவதாக வந்தால் அவனது தாய் தந்தையர் அனுமதி பெற்றிருக்க வேண்டும் என்ற விதியை வகுத்தார்.



சிராவஸ்தியில் சுதந்தன் என்ற பணக்கார வியாபாரி இருந்தான். புத்தர் மழைகாலத்தில் தங்கி இருக்க அழகான ஜேதவனத்தை அவன் அளிக்க விரும்பினான். அந்த வனம் ஜேதன் என்ற க்ஷத்திரியனுடையது. அது முழுவதும் தங்கக் காசுகளைப் பரப்பி அக்காசுகளைத் தனக்கு விலையாகக் கொடுத்தால் அந்த வனத்தை சுதத்தனுக்கு விற்பதாக ஜேதன் கூறினான்.

சுதத்தனும் தன் சொத்தை எல்லாம் விற்றுத் தங்கக் காசுகளாக்கினான். ஆனால் அவற்றால் பாதி வனத்தைத் தான் மூடமுடிந்தது. இது கண்டு ஜேதனே மனம் நெகிழ்ந்து மற்றப் பாதியை தன் பொற்காசுகளால் பரப்பி மூடினான். இருவருமாகச் சேர்ந்து புத்தர் பிரானை வரவேற்றார்கள்.





புத்தர் ஜேதவனத்திலிருந்த போது கௌதமி என்பவளின் மகன் இறந்து விட்டான். அவனுக்கு அவளது உறவினர் எவ்வளவோ ஆறுதல் கூறியும் தன் மகனுக்கு தகனக் கிரியைகளைச் செய்யாமல் இருந்தாள்.

அப்போது சிலர் அவளிடம் "நீ போய் புத்தரைப்பார். அவரால் உன் மகனை உயிர்ப்பிக்க முடியும்" என்றனர். அவளும் புத்தரிடம் போய் மகனுக்கு உயிர் கொடுக்க வேண்டவே அவரும் "சாவே ஏற்படாத ஒரு வீட்டிலிருந்து நீ ஒரு கடுகை வாங்கி வா, உன் மகனை உயிர்ப்பிக்கிறேன்" என்றார்.





கௌதமியும் தன்னால் அப்படி ஒரு கடுகை வாங்கி வந்துவிட முடியும் என்று எண்ணி மகிழ்ந்து ஒவ்வொரு வீடாகப் போய்க் கேட்டாள். எந்த வீடும் சாவு ஏற்படாததாக இல்லை. மிகப்பெரிய பணக்காரன் வீட்டில்கூட அந்த ஆண்டில் மூன்று பேர்கள் இறந்து விட்டனராம்.

ஒரு வைத்தியர் வீட்டிற்குப் போனாள். அங்கும் அவரது மகன் இரண்டு மாதத்திற்கு முன் இறந்து போனானும். வைத்தியரால் சாவை மருந்து கொடுத்துத் தடுக்க முடியவில்லையா என அவள் ஆச்சரியப் பட்டாள்.





அப்போதுதான் அவளுக்கு புத்தர் தனக்கு என்ன உபதேசம் செய்ய விரும்பினார் என்பது தெரிந்தது. அவள் உடனே தன் மகனின் உடலை மயானத்திற்கு எடுத்துப் போய் ஈமச்சடங்குகளைச் செய்தாள்.

அன்று மாலையே அவள் புத்தரிடம் வந்தாள். அவரும் ''கடுகு கிடைத்ததா?'' என்று கேட்கவே அவளும் '' இல்லை சுவாமி. ஆனால் அதனால் உபதேசம் கிடைத்தது''. என்றாள். புத்தரும் அவளுக்கு ஞானோபதேசம் செய்ய அவள் அவரது சிஷ்யை ஆனாள்.





புத்தர் வைசாலி நகரில் இருந்த போது அவருக்கு அவருடைய தந்தை மரணப் படுக்கையில் இருப்பதாகத் தகவல் வந்தது. அவர் உடனே கபிலவஸ்துவிற்குப் போய் தன் தந்தையைக் கண்டு நற்கதி பெற அருளினார். பின்னர் அவர் தனது மதத்தை மக்களிடையே பரப்பக் கிளம்பி விட்டார்.

# சீச்சீ! திருடனிடமா திருடுவது?

மங்கன் என்ற திருடன் ஒருநாள் இரவு மன்னனின் பொக்கிஷ அதிகாரியின் வீட்டிற்குத் திருடச் சென்ருன். அப்போது அந்த அதிகாரி தன் மனைவியிடம் ''இன்றும் ஒரு ஆயிரம் வராகன் அரசனுக்குத் தெரியாமல் எடுத்து வந்து விட்டேன். இதோடு மொத்தம் பத்தாயிரம் வராகன் பொக்கிஷத்திலிருந்து திருடி வந்து விட்டேன் போ'' என்ருன்.

அப்போது மங்கன் தும்மிய சத்தம் கேட்டு பொக்கிஷ அதிகாரி வந்து அவனைப் பிடித்தான். அவனே ''நான் உன் வீட்டில் எதுவும் திருடமாட்டேன். ஒரு திருடன் வீட்டில் போய் இன்னொரு திருடன் திருடுவதா?'' என்று கேட்டான்.

அதிகாரியோ ''ஏய்! யாரைப் பார்த்து திருடன் என்கிருய்? நான் அரசனின் பொக்கிஷ அதிகாரி. தெரியுமா?'' என்ருன். மங்கனும் சிரித்தவாறே ''ஓ! தெரியும். அரசனின் பொக்கிஷத்திலிருந்து நீ பத்தாயிரம் திருடியதும் தெரியும். நானாவது ஊர் அறியத் திருடுகிறேன். நீயோ பயந்து பயந்து திருடுகிருய்'' என்று கூறிப் போய் விட்டான். மறுநாளே பொக்கிஷ அதிகாரி தான் திருடியதை எல்லாம் யாருக்கும் தெரியாமல் பொக்கிஷத்தில் வைத்து விட்டான்.





# ஒரு மரியாதையாக!

சிவகிரியில் சீனப்பன் என்ற பணக்காரன் இருந்தான். அவன் சூதாடிகளுக்கே பணம் கடன் கொடுப்பான் வட்டியோ பைசாவுக்குப் பைசா! ஆனால் சூதாடிகள் இது பற்றிக் கவலைப்படவில்லை. சூதாட்டத்தில் பணம் கிடைத்ததும் கடனை அடைத்து விடுவார்கள்.

சீனப்பன் இவ்வாறு சூதாடிகளுக்கு மட்டுமே கடன் கொடுப்பது கண்டு அடுத்த ஊரிலிருந்த பெரியசாமி என்ற பணக்காரர் அவனை சந்தித்த போதெல்லாம் ''சூதாடிகளுக்குப் பணம் கொடுத்து சம்பாதிக்கிறாயே. இதனால் கெட்டபழக்கத்தை நீ ஊக்குவிக்கிறாய்'' என்று கடிந்து கொண்டார். ஆனால் சீனப்பன் அது பற்றிக் கவலைப் படவில்லை. சில வருடங்களில் சீனப்பனின் ஊரிலிருந்த சூதாடிகளெல்லாம் ஒருவர் பின் ஒருவராக இறந்து விட்டனர். இதனால் வருத்தப் பட்டவன் சீனப்பன் ஒருவனே. ஏனென்றால் அவனுக்கு வரும் வட்டி போயிற்றே.

இப்படி இருக்கும் போது ஒரு நாள் இரவு பத்து மணிக்கு மேல் பெரியசாமி சீனப்பனின் வீட்டிற்கு வந்தார். அவர் ''சீனப்பா, நான் இப்போது சூதாட்டத்தில் இறங்கி விட்டேன். இனி உன் உதவி தேவை, இப்போது நூறு ரூபாய் கொடு. வட்டியோடு திருப்பித் தருகிறேன்'' என்றார். பெரியசாமிக்கு சிவகிரியில் நிலங்கள் இருந்ததால்தான் கடனைக் கொடுத்து அவற்றை எடுத்துக் கொண்டு விடலாம் என சீனப்பன் எண்ணி உடனே கடன் பத்திரம் எழுதி வாங்கிக் கொண்டு நூறு

உடுமலை உலகநாதன்

ரூபாயைக் கொடுத்தான். பின்னர் சிவகிரியில் இன்னும் யார் யார் சூதாடுகிறார்கள் என்பதைக் காண அப்போதே பெரியசாமியின் பின்னால் மறைந்து மறைந்து சென்றான். மற்ற சூதாடிகளைத் தெரிந்து கொண்டால் அவர்களுக்கும் பணம் கொடுத்து வட்டி வசூலிக்கலாமே.

பெரியசாமி ஊருக்கு வெளியே ஒரு பாழடைந்த வீட்டிற்குள் நுழைந்தார். சீனப்பனும் அந்த வீட்டு சன்னல் வழியாக உள்ளே பார்த்தான். அவர்களெல்லாம் முன்பு அவனிடம் கடன் வாங்கி சூதாடி இறந்து போனவர்களே. பிசாசுகளாக மாறி அங்கே இருக்கிறார்கள். இது தெரியாமல் பெரியசாமி பிசாசுகளுடன் சூதாடுகிறாரே என சீனப்பன் எண்ணிச் சிரித்துக் கொண்டான்.

மறுநாள் இரவும் பெரியசாமி சீனப்பன் வீட்டிற்கு வந்து ஐநூறு ரூபாய் கடன் வாங்கிப் போனார். இம்மாதிரி தினமும் கடன் பத்திரம் எழுதிக் கொடுத்து அவர் சீனப்பனிடம் பணம் வாங்கிக் கொண்டே போனார் இப்படியாக இருபது நாட்கள் கழிந்தன.

மறுநாளிரவு பெரியசாமி வந்து பணம் கடன் கேட்ட போது சீனப்பன் ''ஐயா! நீங்கள் நிறையக் கடன் வாங்கி வாங்கி விட்டீர்கள். அதனால் அந்தத் தொகைக்கு உங்களுக்கு இந்த ஊரிலுள்ள உங்கள் நிலங்களை எனக்கு எழுதிக்



கொடுங்கள்'' என்றான். பெரியசாமி ''ஆகா. நாளை என் ஊருக்கு வா. சாட்சிகளை வைத்து பத்திரம் எழுதிக் கொடுக்கிறேன். இப்போது ஆயிரம் ரூபாய் கொடு'' என்றார். தனக்கு தான் கடன் கொடுத்ததை விடப் பத்து மடங்கு விலையுள்ள நில புலன்கள் கிடைக்கப் போவது குறித்து சீனப்பன் மகிழ்ந்து போய் உடனே ஆயிரம் ரூபாயை எடுத்துக் கொடுத்தான். அவரும் பணத்தோடு சென்றார்.

மறு நாள் காலையில் சீனப்பன் பெரியசாமியின் ஊருக்குப் போனான். அப்போது தான் அவனுக்கு அவர் இறந்து ஒரு மாதமாகி விட்டது என்பது தெரிந்தது.

உடனே அவன் தன் ஊருக்கு வந்து பெரியசாமி எழுதிக் கொடுத்த கடன் பத்திரங்களை எடுத்துப் பார்த்தான். அதில் ஒன்றிலாவது பெரிசாமி போட்டகை எழுத்து இருக்கவில்லை.

அன்றிரவு பெரியசாமி மறுபடியும் வந்தார். அவரைப் பார்த்ததுமே ''ஐயோ பெரியசாமி பிசாசே! போதும் இத்தோடு என்னை விட்டுவிடு'' என்று சீனப்பன் அலறினான். ஆனால் பெரியசாமியோ ''அதெப்படி? நீ என் நண்பர்களான சூதாடிகளுக்குக் கொடுத்த கடனால் அவர்கள் குடும்பங்கள் கஷ்டப்பட்டனவே. ஒவ்வொன்றாக நல்ல நிலைக்கு நான் கொண்டு வந்தேன். இன்னும் சில குடும்பங்களை நல்ல நிலைக்குக் கொண்டு வரவேண்டும். அதுவரை உன்னை விடமாட்டேன்'' என்றார்.

சீனப்பனோ ''நாளையே நான் அந்தக் குடும்பங்களுக்கு எல்லாம் பணத்தைக் கொடுத்து விடுகிறேன்'' எனக் கெஞ்சினான். பெரியசாமி ''சரி'' எனக் கூறி மறைந்தார். மறு நாளே சீனப்பன் தான் கடன் கொடுத்து சீரழிந்த குடும்பங்களுக்குப் பணத்தைக் கொண்டு போய்க் கொடுத்தான்.



# இவனே மகன்!

சபாபதிக்குப் பணம் இருந்தும் மகனே இல்லை. அவன் மணி என்பதனை சுவீகாரம் எடுத்துக் கொண்டான். அதைக் கேள்விப்பட்டு வேறு ஊரிலிருந்த சபாபதியின் தம்பி வந்து ''அண்ணா! ஊர் பேர் தெரியாத அனாதையை நீங்கள் சுவீகாரம் எடுத்துக் கொண்டிருக்கிறீர்களே. அவனை நீங்கள் எப்படிப் பாசத்தோடு வளர்த்தாலும் நம் வீட்டுப் பிள்ளை இல்லையே. வேறு வீட்டுப் பையன் தானே'' என்றான்.

சபாபதி சிரித்து விட்டுப் பேசாமல் இருந்தான். அவனது தம்பியும் ஊர் திரும்பிவிட்டான். சில வருடங்களுக்குப் பின் சபாபதியைக் காண வந்து அவனது தம்பி ''அண்ணா! என் ஒரே மகன் என்னோடு சண்டை போட்டுக் கொண்டு வேறாகப் போய் விட்டான். நீ வளர்த்து வந்த மணி என்ன ஆனான்?'' என்று கேட்டான்.

சபாபதியும் ''அவன் என் சொந்த மகனைப் போல இருக்கிறான். எனக்குக் கொஞ்சம் உடம்பு சரி இல்லை என்றாலும் பரிவுடன் கவனித்துக் கொள்கிறான். எனக்காக வேண்டுதல்களை செய்து கொண்டு விரதம் இருக்கிறான். இவன் தான் உண்மையான மகன்'' என்றான்.





# இதுதான் ரகசியம்

ஒரு ஊரில் ராமைய்யா என்ற பெரிய வியாபாரியும்முத்தைய்யா என்ற சிறிய வியாபாரியும் இருந் தனர். இவரும் நண்பர்களே. இருவரது மகன்களும் பட்டணத் தில் உயர் கல்வி கற்று வந்தார்கள்.

ஒரு முறை முத்தைய்யா ராமைய்யாவிடம் ''நாம் இப் படியே தினமும் வியாபாரம் என்றே இருக்கிறோம். ஒரு பத் துப் பதினைந்து நாட்களுக்கு க்ஷேத் திரங்களுக்குப் போய் சுவாமி தரி சனம் செய்து விட்டு வரலாம். நீயும் வருகிறாயா?'' என்று கேட் டான். ராமைய்யாவோ ''ஓ! அதற்கு நிறையப் பணம் வேண் டுமே. இப்போது என்னிடம் ஒரு பைசாக் கூட இல்லை'' என்றான்.

முத்தைய்யாவும் ''இதோ பார்! உன் செலவையும் நான் போட்டுக் கொள்கிறேன். வா என்னோடு'' என்று கூறி ராமைய்யாவையும் அழைத்துக் கொண்டு பல ஊர்க் கோவில்களைப் பார்த்து வரக் கிளம்பினான்.

இருவரும் ஊர் திரும்பிய போது அவர்கள் ஊரின் கோவில் திருப்பணிக்காக நன்கொடை வசூ லிக்க கோவில் தர்மகர்த்தா அவர் களிடம் வந்தார். அப்போது ராமைய்யா ''இப்போது என்கை யில் எதுவும் இல்லை. கடைசியில் என்னிடம் வாருங்கள். நானும் என்னால் ஆனதைக் கொடுக் கிறேன்'' என்றான்.

அப்போது தர்மகர்த்தா ராமைய்யாவின் பக்கத்தில் நின்ற முத்தைய்யாவிடம் நன்கொடை கேட்கவே அவனும் ''நீங்கள் இந் தத் திருப்பணியில் இறங்கி இருப் பது எனக்கு முன்பே தெரியும். என் மனைவியிடம் நீங்கள் வந்து

கமலா நாராயணன்

கேட்டால் நூறு ரூபாய் கொடுக்கும்படிச் சொல்லிப் பணத்தையும் கொடுத்துப் போயிருந்தேன். அதையே நீங்கள் வாங்கிக் கொள்ளுங்கள்'' என்றான்.

சில நாட்களுக்குப் பின் முத்தைய்யா பட்டணத்தில் படிக்கும் தன் மகனைக் காணப் போனான். அங்கே இருந்த ராமைய்யாவின் மகனையும் அவன் பார்த்தான். அந்த மகனும் "என்னமோ தெரியவில்லை. மூன்று மாதங்களாக எனக்கு என் தந்தை பணமே அனுப்பவில்லை. நாளைக்குள் கல்லூரிக்குப் பணம் கட்டியாக வேண்டும். இல்லாவிட்டால் என் பெயரையே அடித்து விடுவார்கள்'' என்றான் வருத்தத்தோடு.

முத்தையாவும் ''கவலைப் படாதே. என்னிடம் பணம் இருக்கிறது. அதைக் கொடுக்கிறேன். நீ கட்டி விட்டுப் படி. பிறகு உன் தந்தையிடம் வாங்கிக் கொள்கிறேன்'' என்று கூறி தன்னிடம் இருந்த பணத்தில் தான் ஊருக்குத் திரும்ப வேண்டியதற்கு ஆகும் பணத்தை எடுத்துக் கொண்டு மீதத்தை ராமைய்யாவின் மகனிடம் கொடுத்தான்.

ஊர் திரும்பிய முத்தையா ராமைய்யாவைக் கண்டு ''என்ன இது? உன்மகனைப்படிக்க அனுப்பி விட்டு பணம் அனுப்பாமல் இருந்தால் அவன் என்ன செய்வான்? நீயோ என்னைவிடப் பெரிய அளவில் வியாபாரம் செய்கிறாய்.



பணமா இல்லே?'' என்று கோபத்தோடு கடிந்து கொண்டான்.

ராமைய்யாவும் "முத்தைய்யா! என்னுல் எதையும் சமாளிக்க முடியவில்லே. வியாபாரம் பெரிது என்ற பெயரே ஒழிய கையில் ஒரு காசு மிச்சமாவதில்லே. என் மகனுக்குப் பணத்தை 'நாளே அனுப்பலாம்' 'நாளே அனுப்பலாம்' என்றே நாட்களேக் கழித்து விட்டேன். வரும் பணம் வியாபாரத்தில் போட்டுப் புரட்டவே போதவில்லே. ஆமாம், நீ என்னே விடச் சிறிய அளவில் தானே வியாபாரம் செய்கிருய். உன்னுல் எப்படி இவ்வளவு தாரளமாகச் செலவு செய்து பணம் மீதமாக்க முடிகிறது?'' என்று கேட்டான்.

முத்தையாவும் ''என்னேடு வீட்டிற்கு வா. அந்த ரகசியத்தைக் கூறுகிறேன்'' எனக் கூறி ராமைய்யாவைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்ருன். அங்கு தன் பூஜை அறையில் வைத்திருந்த ஐந்து உண்டியல் பெட்டிகளே முத்தைய்யா ராமைய்யாவிற்குக் காட்டி ''இது ஒவ்வொன்றும் ஒவ்வொரு செலவிற்காக. ஒன்று கடவுள் கைங்கரியத்திற்கு. மற்றது மகனின் படிப்பிற்கு. மூன்ருவது முக்கிய பண்டிகைகளில் செலவு செய்வதற்கு. நான்காவது கல்யாணச் செலவிற்கு. ஐந்தர்வது பயணம் போகச் செலவு. இவற்றில் தினமும் கொஞ்சம் கொஞ்சமாக நானும் என் மனேவியும் பணம் போட்டு வருவதாலேயே எல்லாச் செலவுகளேயும் செய்ய முடிகிறது இது தான் ரகசியம்'' என்ருன்.

ராமைய்யாவும் ''ஆகா! நீ முன் கூட்டியே யோசனே செய்து இப்படிப் பணம் சேர்க்கிருய். இது மாதிரி செய்யத் தெரியாமல் நான் இத்தனே நாள் திண்டாடினேன். இனி உன் போலவே செய்கிறேன்'' எனக் கூறி அங்கிருந்து சென்ருன்.



# ஏன் தெரியுமா?

ஒரு பணக்காரன் தன் மகளுக்குக் கல்யாணம் செய்ய மூன்று வரன் களில் யாரைத் தேர்ந்தெடுக்கலாம் என்று தன் மகளிடமே கேட்டான். ஒருவன் ராணுவத்தில் உயர் பதவி வகிப்பவன். மற்றவன் பெரிய வியா பாரி. மூன்றுவதவன் கவிதை எழுதி ஓவியங்களை வரையும் கலைஞன். இம் மூவரில் பணம் உள்ள ஒருவனைத் தன் மகள் தேர்ந்தெடுப்பாள் என அவன் நினைத்தான்.

மகள் கலைஞனைத் தேர்ந்து எடுக்கவே தந்தையும் ''அவனிடம் பணம் இல்லையே. மற்ற இருவர்களில் யாரையாவது ஒருவனைத் தேர்ந் தெடுக்கக் கூடாதா?'' என்று கேட்டான்.

மகளும் ''அப்பா! ராணுவ அதிகாரி உடலில் வலுவுள்ளவரை தான் சம்பாதிக்க முடியும். வியாபாரியின் வருமானம் லாப நஷ்டத்தைப் பொறுத்தது. கலைஞனே தன் படைப்புகளால் பெயரும் புகழும் பெற்று என்றென்றும் பொருள் ஈட்ட முடியும்'' என்றாள்.

—எச். ராகவேந்திரன்






# ஐயோ! போச்சே!!

சந்திரபுரி கிராம அதிகாரிக்கு நிறைய நிலபுலன்கள் இருந்து பணம் இருந்தும் மகாக் கஞ்சனுக இருந்தான். ஒரு பைசா செலவு செய்ய பத்துத் தடவை கணக்குப் பார்ப்பான்.

ஒரு முறை அவனது பசு ஒன்று நோய் வாய்ப்பட்டது. அதன் வயறு பருத்து சரியாக மூச்சு கூட விட முடியாமல் இருக்கவே அவன் அந்தப் பசு இனி இறந்து விடும் என்றும் அதற்கு வைத்தியம் பார்ப்பது வீண் என்றும் எண்ணினுன். அது இறந்தால் அதைத் தூக்கிக் கொண்டு போக நான்கு பேருக்குப் பணம் கொடுக்கவேண்டும். ஊருக்கு வெளியே கொண்டு போய்க் குழி தோண்டி அதில் அதைப் போட்டுப் புதைக்க வேறு பணம் கொடுக்கவேண்டுமே என எண்ணி அந்தச் செலவு செய்யாமல் தப்ப என்ன வழி என்று யோசிக்கலானுன்.

அப்போது அவ்வூர் ராமாசாஸ்திரி என்ற புரோகிதர் தெரு வழியே போய்க் கொண்டிருந்தார் அந்தப் பசுவை அப்போதே அந்த சாஸ்திரிக்கு தானம் செய்து உடனேயே அவரது வீட்டிற்குக் கொண்டு போய் விடும்படிக் கூறி விட்டால் தலைவலி தீர்ந்தது என அவன் எண்ணினுன் உடனே அவன் அவரைக் கூப்பிட்டு ''சாஸ்திரிகளே, நேற்றுத் தான் நான் ஒரு வேண்டுதல் செய்து கொண்டு யாராவது ஒரு பிராம்மணருக்கு கோதானம் அளிப்பதாகக் கூறினேன். நீங்கள் அந்த தானத்தை வாங்கிக் கொள்ளுங்கள்'' என்ருன்.

ராமாசாஸ்திரியும் ஒரு பசுமாடு கிடைக்கிறதே, அதனுல் தினமும்

பாபநாசம் சாமா

பால் கறந்து தானும் சாப்பிட்டுத் தன் குழந்தைகளுக்கும் கொடுக்க லாமே என்ற ஆசையில் தானத்தை வாங்கிக் கொண்டார் ஆனால் கிராம அதிகாரி அவரைக் கொல்லைப்புறத்திற்கு அழைத்துப் போய் பசுவைக் காட்டியபோது அவர் திடுக்கிட்டுப் போனார். அப் போதுதான் அவருக்கு மகாக் கஞ் சனான அந்த கிராம அதிகாரி திடீ ரென கோதானம் ஏன் செய்தான் என்பது புரிந்தது. பசு இறக்கும் நிலையில் உள்ளது என்று எண்ணி அதை எடுத்துப்போய் புதைக்கும் செலவை மிச்சப்படுத்தவே அப் படி செய்தான் என்பதை அவர் ஊகித்துக் கொண்டார். கிராம அதிகாரியோ ''உம், ஏன் தயங்குகிறீர்கள்? உமக்கு மாட்டை நான் தானம் கொடுத் தாகி விட்டது. இனி அது உங்க ளுடையது. அதற்கு இனி ஏதாவது ஏற்பட்டால் நான் ஜவாப்தாரி அல்ல. நீங்கள்தான் பொறுப்பு. எனவே இப்போதே மாட்டை உங்கள் வீட்டிற்கு ஓட்டிப் போங் கள்'' என்றான்.

சாஸ்திரியும் மாட்டை நன்கு பார்த்து விட்டு ''சரி, இன்னும் ஐந்து நிமிஷத்தில் வந்து ஓட்டிக் கொண்டு போகிறேன்'' என்று கூறி விட்டு ஊருக்கு வெளியே போய் ஏதோ பச்சிலைகளை நிறை யக் கொண்டு வந்தார். அவர் அதனை அந்தப் பசுவின் முன் போட்டு அதனைச் சாப்பிடச் செய்



தார். பசுவும் அந்த இலைகளை ஆவலுடன் தின்றது. ஏனெனில் அதற்குச் சில நாட்களாகச் சரியாக கிராம அதிகாரி தீவனமே வைக்கவில்லை. அதனால் பசும் தழைகளைக் கண்டதும் அது 'மள' 'மள' வென்று சாப்பிட்டு விட்டது.

சாஸ்திரியார் கொண்டு வந்தது ஒருவகை மூலிகை. அவர் பசுவுக்கு ஏற்பட்டிருந்த நோயைக் கண்டு அந்த பச்சிலைகளைக் கொண்டு வந்து போட்டார். அதைச் சாப்பிட்ட அந்தப் பசு சில விநாடிகளில் 'அசுக்'கென்று பலமாகத் தும்மியது. அதன் வாயிலிருந்து பந்து போலக் கோழை வெளியே வந்து விழுந்தது. அதன் பின் பசு ஒழுங்காக மூச்சு விடலாயிற்று. அதன் வயற்று வீக்கமும் வற்றி விட்டது.

சாஸ்திரியாரும் திருப்தி அடைந்து கிராம அதிகாரியிடம் ''இப்போது நீங்கள் தானம் கொடுத்த பசுவை ஓட்டிப் போகிறேன்'' எனக் கூறி அதை ஓட்டிக் கொண்டு சிரித்தவாறே சென்றார்.

கிராம அதிகாரியோ ''அடடா என்ன முட்டாள் நான்! இப்படிச் செய்தால் சரியாகி விடும் என்று என் புத்தியில் படவே இல்லையே. மாட்டு வைத்தியருக்கு நிறையப் பணம் கொடுக்க வேண்டுமே என்று பேசாமல் இருந்து விட்டேனே. இதே சாஸ்திரிக்கு ஒரு ரூபாயைக் கொடுத்து இந்த மாட்டிற்கு வைத்தியம் பார்க்காமல் போனேனே. இது இறந்து விடுமே என பயந்து அதற்கு வேறு செலவு செய்யவேண்டுமே என்று தானே தானம் கொடுத்தேன். ஒரு ரூபாய் செலவு செய்யத் தயங்கி ஐநூறு ரூபாய் பெறுமானமுள்ள பசுவை தானம் கொடுத்தேனே. ஐயோ! போச்சே!!'' எனக் கூறித் தன் தலையில் அடித்துக் கொண்டு புலம்பினான்.






சூரிய வம்சத்தில் அருணன் என்ற மன்னன் இருந்தான். அவன் மகன் சத்திய விரதன். சத்திய விரதனின் நடத்தை நேராக இருக்கவில்லை. ஒரு முறை அவன் விவாகமாக இருந்த ஒரு பிராம் மணப் பெண்ணைத் தூக்கிக் கொண்டு போய் விட்டான். அப் பெண்ணின் தாய் தந்தையர் அருணனிடம் வந்து முறையிட்டனர்.

அது கேட்ட அருணன் தன் மகனை வரவழைத்து ''குலத்தின் பெயரையே கெடுக்கிறாயே, கயவா! எங்கேயாவது போய்த் தொலை என் கண் முன் படாதே'' என்று கோபத்தோடு கூறினான். சத்திய விரதனும் அமைதியாக ''எங்கே போகச் சொல்கிறீர்கள் அப்பா'' என்று கேட்டான்.

அருணனோ ''நாயினும் கீழாக நீ நடந்து கொண்டாய். உன்னை நான் ஆரம்பத்திலிருந்தே பார்த்து வருகிறேன். நீ செய்வதெல்லாம் அக்கிரமும் அநியாயமுமே. இப்போது என்ன வென்றால் மணமாக இருந்த பெண் ஒருத்தியையே கடத்திக் கொண்டு போய் விட்டாய். எனவே பஞ்சமகாபாதகத்தைச் செய்த நீ புலால் புசிக்கும் புலையனாக மாறி அவர்கள் வாழும் பகுதிகளுக்குப் போ. இங்கே வராதே. உன்னால் என் குடும்பத்திற்கே அவமானம்'' என்றான். அவனது குருவான வசிஷ்டரும் அவன் கூறுவதே சரி



விதித்தான். இந்த சமயத்தில் விசுவாமித்திரர் தன் மனைவி மக்களை விட்டுப் பிரிந்து கௌசிக நதிக்கரைக்குப் போய் தவம் செய்யலானார். நாட்டில் பஞ்சம் ஏற்படவே விசுவாமித்திரரின் மனைவியும் குழந்தைகளும் உண்ண உணவு கிடைக்காமல் தவித்தார்கள். அவரது மனைவி தன் குழந்தைகளில் ஒன்றை விற்றாவது பணம் பெற்று எப்படியாவது உணவுப் பொருள் வாங்கி காலம் கழிப்பது எனத் தீர்மானித்துக் கொண்டாள். அவளுக்குத் தன் முதலாவது மகன் தன் கணவருக்குப் பிரியமானவன் என்பது தெரியும் மூன்றாவது மகனையோ அவள் செல்லமாக வளர்த்து வந்தாள். எனவே தன் இரண்டாவது மகனை விற்க அவள் தீர்மானித்தாள்.

அவள் தன் இரண்டாவது மகனின் கழுத்தில் தர்ப்பைப் புல்லைத் திரித்துக் கயறுபோலக் கட்டி அவனை இழுத்துக்கொண்டு போகலானாள். அந்தப் பையனோ இனித் தன் நிலை என்ன ஆகுமோ எனப் பயந்துப் கதறலானான். தன்னை விற்க வேண்டாம் எனக் கத்திக் கூறினான் அவனால் அவனது தாய் அவனைப் பற்றிக் கவலைப்படாமல் இழுத்துக் கொண்டே சென்றாள். இப்படி இழுத்து வந்த விசுவாமித்திரரின் மனைவியை சத்திய விரதன்

என ஆமோதிததார். இதனால் தன் தந்தை மீதும் வசிஷ்டர் மீதும் கோபமும் வெறுப்பும் கொண்டு சத்தியவிரதன் வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டு காட்டில் வேடர்களுடன் வாழச் சென்று விட்டான்.

தனக்கு இருந்த ஒரே மகன் காட்டிற்குப் போய் விட்டதால் அருணன் தனக்கு மேலும் குழந்தைகள் பிறக்க வேண்டும் என்பதற்காகத் தவம் செய்யக் கானகத்திற்குச் சென்றான். இதனால் நாட்டில் ஒரே குழப்பமும் கலவரமும் ஏற்படலாயிற்று. இந்திரனும் அப்படிப்பட்ட நாட்டில் மழை பெய்யக் கூடாது எனத் தடை

பார்த்து ''இதென்னம்மா! பையனை இப்படிக் கதறகதற அழ விட்டு இழுத்துக் கொண்டு போகிறாயே. இவனை எங்கே அழைத்துப் போகிறாய்? என்ன செய்யப் போகிறாய்?'' என்று கேட்டான்.

அவளும் ''நான் விசுவாமித்திரரின் மனைவி. அவர் என்னையும் தம் குழந்தைகளையும் விட்டு விட்டு காட்டிற்குத் தவம் செய்யப்போய் விட்டார். இங்கேயோ பஞ்சம். கையில் காசு இல்லை. எப்படிச் சாப்பிடுவது? எனவே இவனை விற்று அந்தப் பணத்தைக் கொண்டாவது என் மற்ற குழந்தைகளுக்கு உணவு கொடுப்பது எனத் தீர்மானித்தேன். அதற்காகத் தான் இப்படி இழுத்துச் செல்கிறேன்'' என்றாள்.

அப்போது சத்திய விரதன் ''இது அநியாயம். நீ உன் குழந்தைகளை அழைத்துக் கொண்டு உன் குடிலுக்குத் திரும்பிப் போ. நான் தினமும் உங்களுக்கு ஏதாவது ஆகாரம் கொண்டு வந்து கொடுக்கிறேன். என்றாவது ஒரு நாள் உன் கணவன் திரும்பி வரத்தானே வேண்டும்?'' என்றான்.

அதைக் கேட்டு விசுவாமித்திரரின் மனைவி மகிழ்ந்து தன் குழந்தைகளோடு தன் குடிலுக்குத் திரும்ப வந்தாள். சத்திய விரதனும் தான் சொன்னபடி கிழங்கும் கனியும், மிருகங்களை வேட்டையாடி அவற்றின் மாமிசத்தையும் விசுவாமித்திரரின் குடும்பத்தவருக்கு தினமும் கொடுத்து வந்தான். அவர்களும் அவற்றை உண்டு காலம் கழித்து வந்தார்கள்.



ஒரு நாள் சத்திய விரதனுக்கு வேட்டையில் எந்த மிருகமும் கிடைக்கவில்லை. அதனால் ஊருக்குள் போய் வசிஷ்டரின் யாகப் பசுவைக் கண்டு அதனைப் பிடித்து அவன் கொன்று அந்த மாமிசத்தில் கொஞ்சம் தானும் சாப்பிட்டு விட்டு மீதத்தை விசுவாமித்திரரின் குடும்பத்தவருக்குக் கொண்டு



போய்க் கொடுத்தான். அவர்களும் அது பசுவின் மாமிசம் என்பது தெரியாமல் சாப்பிட்டு விட்டார்கள்.

தன் பசு இறந்து விட்டது என்றும் அதைக் கொன்றவன் சத்திய விரதன் என்றும் வசிஷ்டருக்குத் தெரிந்தது. அவர் சத்திய விரதனைப் பிடித்து வரச் செய்து 'அடே துஷ்டா! உன்னைத் திரிசங்கன் என்று தான் சொல்ல வேண்டும். முதலில் ஒரு பிராம்மணப் பெண்ணைக் கவர்ந்து சென்றாய். உன் தந்தையே உன்னை வீட்டை விட்டு துரத்தினார். இப்போது காரணம் இல்லாமல் பசுவைக் கொன்றாய். இப்படியாக மூன்று மாபெரும் பாதகச் செயல்களைச் செய்திருக்கிறாய் இன்று முதல் உன் பெயர் திரிசங்கு. நீ பிசாசாகி மனிதர்களின் கண்களுக்குப் புலப்படாமல் திரி'' என சபித்தார்.

அப்போது முதல் சத்திய விரதனுக்கு திரிசங்கு என்ற பெயர் ஏற்பட்டது. அவன் பிசாசாக அலைந்தான். ஒரு முனிவரின் புதல்வரின் உபதேசப்படி தேவியைக் குறித்துத் தவம் செய்தான். பிறகு அவன் சில பிராம்மணர்களிடம் போய் ''ஐயா, நான் யாகம் செய்ய விரும்புகிறேன். நீங்கள் இருந்து நடத்திக் கொடுங்கள்'' என்று வேண்டினான்.

அவர்களோ ''உன் குலகுரு நீ பிசாசாகித் திரியும்படி சபித்தார். எனவே வேத கர்மாக்களை நீ செய்ய முடியாது'' என்றார்கள். அதைக் கேட்ட திரிசங்குவிற்கு வாழ்க்கையின் மீதே வெறுப்பு ஏற்பட்டு விட்டது. தந்தையைப் பிரிந்து நாட்டை இழந்து, குருவின் சாபம் பெற்று எந்த அனுஷ்டானத்தையும் செய்ய முடியாமல் ஏன் வாழவேண்டும் என அவன் நினைத்துத் தற்கொலை செய்து கொள்ள முடிவு செய்தான்.

அவன் உலர்ந்த குச்சிகளையும் கட்டைகளையும் அடுக்கினான். அதில் நெருப்பை மூட்டிக் குதிக்கத் தீர்மானித்து அதற்கு முன்

குளித்து விட்டு ஜெகதம்பிகையை தியானம் செய்தான். தேவியும் ஆகாயத்தில் தோன்றி ''அவசரப் படாதே. உன் தந்தை கிழவனுகி விட்டான். உனக்கே தன் நாட்டைக் கொடுத்து விட்டு நிரந்தரமாகக் காட்டில் இருந்து அவன் தவம் செய்யப் போகிருன். நானே உன்னே அழைத்துப் போக மந்திரிகளே உன் தந்தை அனுப்பும்படி நான் செய்கிறேன்'' எனக் கூறி மறைந்தாள்.

திரிசங்குவும் தற்கொலே செய்து கொள்ளும் எண்ணத்தைக் கைவிட்டான். இதே சமயம் நாரதர் அருணனிடம் போய் ''உன் மகனுன சத்தியவிரதன் வாழ்க்கையில் விரக்தி அடைந்து தற்கொலே செய்து கொள்ளப் போகிருன். நீயோ இங்கே தவம் செய்ய உடகார்ந்து விட்டாய். உனக்குப் பிறகு உன் நாட்டை ஆள உன் சந்ததியார் யாருமே இல்லே. பார்த்தாயா? உம் இனியும் தாமதிக்காதே. நீ இப்போதே உன் மந்திரிகளே அனுப்பி சத்திய விரதனே அழைத்துவரச் செய். அவனுக்குப் பட்டத்தை அளித்து நாட்டின் மன்னனுக்கு'' என்று கூறினுர். அது கேட்டு அவன் துடித்துப் போய் உடனே மந்திரிகளே அனுப்பி அவனே அழைத்து வரச் செய்தான்.



தன் மகனேக் கண்ட அருணன் அவனது தலே சடை விழுந்து உடல் கருத்து இருப்பது கண்டு அவன் அப்படி ஆகத்தான் தானே காரணம் என எண்ணி மனம் நொந்தான். அவனுக்குப் பல நற்புத்திகள் கூறி நாட்டைக் கொடுத்து பட்டாபிஷேகம் செய்தான். பிறகு அருணன் தன் மனேவியுடன் கானகத்திற்குத் தவம் செய்யப் போய் விட்டான்.

திரிசங்கு அரசனுகிப் பல யாகங்களேச் செய்தான். அவனுக்கு ஹரிச்சந்திரன் என்ற மகன் பிறந்தான். அவன் பெரியவன் ஆனதும் திரிசங்கு அவனே அரசனுக்கி விட்டுத்தான் தன் பூத உடலோடு



போகிறது. நான் வேறு யாருடைய உதவியைக் கொண்டு யாகம் செய்து இந்த உடலோடு சொர்க்கம் போகிறேன்'' என்ருன்.

வசிஷ்டருக்குக் கோபம் வந்து ''குருவின் வார்த்தையை மீறும் நீ மறுபடியும் புலையனுகிப் போவாய்'' என்று சபித்தார். அவனும் புலையனுகி அங்கும் இங்கும் திரிந்து கங்கைக் கரையை அடைந்தான்.

தன் தந்தை புலையனுகி விட்டது ஹரிச்சந்திரனுக்குத் தெரிந்தது. அவன் மந்திரிகளை அனுப்பித் தேடி திரிசங்குவை அழைத்து வரச் சொன்னுன். மந்திரிகள் திரிசங்குவை நாட்டிற்கு வந்து ஆட்சி புரியும்படிச் சொன்னுர்கள். ஆனுல் அவன் தான் புலையனுக இருப்பதால் வரமுடியாது எனக் கூறி அவர்களை அனுப்பி விட்டான்.

அவன் கங்கைக்கரையில் தவம் செய்து கொண்டிருந்த போது விசுவாமித்திரர் தம் தவத்தை முடித்து விட்டுத் தம் வீட்டிற்குத் திரும்பிச் சென்று கொண்டிருந்தார். அவரும் பஞ்சத்தின் போது உணவுக்காக அலைந்தவரே. அவர் தம் மனைவி மக்கள் என்ன ஆனுர்களோ என்று கவலைப்பட்ட போதிலும் தன் வயிற்றை நிரப்பிக்

சொர்க்கலோகம் போக ஆசைப் பட்டான்.

அவன் தன் குலகுரு வசிஷ்டரிடம் முதலில் தன் ஆசையைக் கூறி ''குருவே. நான் இந்த உடலோடு சொர்க்கலோகத்திற்குப் போக விரும்புகிறேன். எனவே நீங்கள் இதற்கான யாகத்தைச் செய்து என்னைச் சொர்க்கலோகத்திற்கு அனுப்பி வையுங்கள்'' என்று கேட்டுப் பார்த்தான். அவரோ மானிட உடலோடு யாருமே சொர்க்கலோகம் போக முடியாது எனக் கூறித் தன்னுல் அவனை அங்கே அனுப்பமுடியாது எனக் கூறி விட்டார். திரிசங்குவும் ''உங்களால் முடியாவிட்டால்

கொள்ள ஒரு புலையனின் வீட்டில் நுழைந்து அங்குள்ள உணவைத் திருட முயன்றார். அப்போது அவர் பிடிபட்டார். விசாரித்து உண்மை அறிந்த புலையன் ''பசி வந்தால் பத்தும் பறந்து போகும். நீங்களோ தவசிரேஷ்டர். காய் கனி கிழங்குகளைப் புசிப்பவர். அப்படி எதுவும் கொடுக்க என்னிடம் இல்லையே. என்ன செய்வது என்று தான் திகைக்கிறேன். ஆனால் என்னிடம் இருப்பது நாயின் மாமிசமே நீங்கள் சாப்பிடுவீர்களா?" என்று கேட்டான்.

அவரோ ''பசித்து இருக்கும் போது எது கிடைத்தாலும் சாப்பிட வேண்டியதுதான். பாவ புண்ணியத்தையா பார்த்துக் கொண்டிருப்பார்கள்? இப்படிப் பட்ட பாவத்தைச் செய்யத் தூண்டியது யார்? வருணதேவன் தானே. அவன் மழையைப் பெய்ய வைத்திருந்தால் இப்படியெல்லாம் பாவம் செய்யவேண்டாமே. அவனுக்கே இந்தப் பாவம் போய்ச் சேரும்'' என்றார்.

விசுவாமித்திரர் இவ்வாறு சொல்லி முடித்ததும் மழை கொட்டு கொட்டென்று கொட்டியது. எங்கும் நீர் நிறைந்தது. விசுவாமித்திரரும் தன் வீட்டை அடைந்தார். அவர் தன் மனைவியிடம் விசாரித்து பஞ்சத்தின்



போது அவர்களுக்குத் திரிசங்கு உணவு கொடுத்துக் காப்பாற்றியதைத் தெரிந்து கொண்டார். வசிஷ்டரது சாபம் அவனுக்கு கிடைத்த விதம் தெரிந்ததும் விசுவாமித்திரர் அவனைத் தேடிக் கொண்டு போனார்.

அவர் அவனைக் கண்டு "திரிசங்கு மன்னா! நீ என் மனைவி மக்களைக் காப்பாற்றினாய். எனவே உனக்கு பதில் உபகாரமாக நான் ஏதாவது செய்யவேண்டும். உன்னைப் பற்றி நான் அதிகமாக அறிந்து கொள்ள வில்லையாயினும் பட்டினியால் வாடித் தவித்த என் குடும்பத்தவருக்கு நீ தக்க சமயத்தில் உணவளித்து காத்து வந்திருக்கிறாய்.

இதற்குக் கைமாருக நான் என்ன செய்யவேண்டுமானாலும் செய்கிறேன். உன் மனதில் ஏதோ ஒரு பெருத்த ஆசை இருப்பதாகத் தெரிகிறது அது என்ன என்று சொல். நான் நீ விரும்புவதைக் கிடைக்கச் செய்கிறேன்?'' என்று கூறினர்.

திரிசங்குவும் வசிஷ்டரிடம் கூறியது போலவே அவரிடமும் தன் பூத உடலோடு சொர்க்கலோகத்திற்குப் போக விரும்புவதாகக் கூறி அதைச் செய்யுமாறு வேண்டினன். விசுவாமித்திரரும் அதற்கான யாகத்தைச் செய்தார்.

வசிஷ்டரோ அந்த யாகத்திற்கு ஒரு முனிவரும் போகக் கூடாது என்று எல்லோரையும் தடுத்து விட்டார். இதனல் விசுவாமித்திரர் மனம் தளர்ந்து விடவில்லை. அவர் திரிசங்குவிடம் ''நீ கவலைப்படாதே. உன்னை இந்த உடலோடு சொர்க்கத்திற்கு அனுப்பி வைக்கிறேன். இந்த வசிஷ்டர் என்ன செய்தாலும் ஒன்றும் பலிக்காது'' எனக் கூறி யாகத்தைத் தொடர்ந்து நடத்தினர். ஆனல் யாகம் முடிவுபெறவில்லை. ஆனல் விசுவாமித்திரர் தம் தவசக்தியை எல்லாம் கொடுத்து திரிசங்குவை சொர்க்கலோகத்திற்கு அனுப்பி வைத்தார். அந்தச் செயலை யாராலும் தடுக்க முடியவில்லை.

புலையனன திரிசங்கு சொர்க்க லோகத்திற்கு வர முயல்வது கண்டு இந்திரனும் மற்ற தேவர்களும் அவனைக் கீழே தள்ளினர்கள். மேலிருந்து கத்திக் கொண்டே திரிசங்கு கீழே விழலானன். விசுவாமித்திரர் தம் தவவலிமையால் அவனை அந்தரத்தில் நிறுத்தி அங்கேயே அவனுக்கு ஒரு சொர்க்கலோகத்தை சிருஷ்டி செய்தார்.

அது கண்டு இந்திரன் பயந்து திரிசங்குவிற்கு ஒளிமிகுந்த உடலை அளித்து சொர்க்க லோகத்திற்கு அழைத்துச் சென்றன்.





# மீசைக்கார மாமா

விமலா கோவிலிலிருந்து வீடு வந்த போது தன் தந்தை யாரோ இருவருடன் பேசிக் கொண்டிருப் பதைக் கண்டாள். அவர்களின் தோற்றம் வயது முதலியவற்றைக் கொண்டு அவர்கள் தந்தையும் மகனுமாக இருக்க வேண்டும் என ஊகித்துக் கொண்டாள்.

விமலாவின் தந்தை விசுவநாதன் உள்ளே வந்து "இவர்கள் பணக் காரர்கள். அந்தப் பையன் சேகர் உன்னை ஒரு திருமணத்தில் பார்த் தானும். உன்னையே கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகத் தன் தந்தையிடம் சொல்லி அவரை அழைத்து வந்திருக்கிறான். ஆனால் அவனது தந்தை வரதட்சணை யாகப் பத்தாயிரம் ரூபாய் வேண் டும் என்கிறார். நம்மால் அவ்வளவு கொடுக்க முடியாது. சரி. வந்த வர்களுக்கு ஏதாவது சிற்றுண்டி யாவது கொடுத்து அனுப்பலாம்'' என்று விமலாவிடம் கூறினான். விமலாவும் உடனே சிற்றுண்டி தயாரித்து வந்த விருந்தாளி களுக்கு அளித்தாள்.

சிற்றுண்டியை அவர்கள் சாப் பிட்டதும் விசுவநாதன் அவர்க ளோடு கிளம்பிச் சென்றான். ஆனால் அவன் வீட்டிற்குத் திரும்பி வந்த போது ''விமலா! உனக்கு பையனைப் பிடித்திருந்தால் சொல். கல்யாணத்தை நடத்தி விடலாம்'' என்றான்.

விமலாவும் ''அவர்கள் கேட்கும் வரதட்சணைக்கு என்ன செய்வீர் கள்?'' என்று கேட்கவே அவனும் ''அது பற்றி நான் பார்த்துக் கொள்கிறேன். உனக்குச் சம்மதந் தானே'' எனக் கேட்டு அவளது சம்மதத்தை அறிந்து கொண் டான். அவன் அப்போதே கல்யா

பாபநாசம் சாமா



விட்ட மாமா. அவனைத் தூக்கி வளர்த்தவன்'' எனவே விமலா வந்து அவரை நமஸ்கரித்தாள். அவரும் அவளை ஆசீர்வதிக்கப் பெண் வீட்டார் அவரை உப சரித்து அனுப்பினார்கள்.

பின்னர் அதே பேர்வழி மாப் பிள்ளை வீட்டார் தங்கி இருந்த வீட்டிற்குப் போய் ''என் தங்கை மகளுக்குக் கணவனாக வரப் போகி றவனைப் பார்க்க வேண்டும். நான் பெண்ணின் மாமா. அவளை நான் தூக்கி வளர்த்தவன்'' என்று சேகரின் தந்தையிடம் கூறினான். சேகரின் தந்தையும் அவரை உட் கார வைத்து சேகரைக் கூப்பிட்டு ''இவர் பெண்ணின் மாமாவாம். அவளைத் தூக்கி வளர்த்தவராம்'' என்று அறிமுகப் படுத்தினான்.

ணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்து விட்டான்.

திருமணத்திற்கு முதல் நாளே மாப்பிள்ளை வீட்டார் வந்து விட் டார்கள். அவர்களை உள்ளூர் பெரிய மிராசுதாரர் சுந்தரேச னின் வீட்டில் இருக்க விசுவ நாதன் ஏற்பாடு செய்திருந்தான்.

கல்யாண வீட்டில் பலர் ஓடி ஓடி பர பரவென வேலைகளைச் செய்துக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு மீசைக்காரப் பேர் வழி அங்கு வந்து ''எங்க சேகர் எப்படிப் பட்ட பெண்ணைத் தேர்ந் தெடுத்திருக்கிறான்? பார்க்க வேண்டும்'' என்றார். அவர் ''நான் மாப்பிள்ளையின் ஒன்று

அதற்குப் பின் அந்த மீசைக் காரப் பேர்வழி பெண் வீட்டிற்கும் மாப்பிள்ளை வீட்டிற்கும் வந்து போய்க் கொண்டிருந்தார். அவர் செய்யும் ஆர்ப்பாட்டங்களால் அவரை இன்னாரெனத் தெரிந்து கொள்ளாமலேயே பலர் உபசரித் துக் கொண்டிருந்தார்கள்.

கொஞ்ச நேரத்திற்குப் பின் அந்த மீசைக்காரர் சேகரின் தந்தையிடம் ''சம்மந்தி, இப்படிக் கொஞ்சம் வருகிறீர்களா? உங்க ளிடம் வர தட்சணை விஷயமாகப் பேச வேண்டும்'' என்றார். சேக

ரின் தந்தை அவரைத் தன் அறைக் குள் அழைத்துப் போய் ''என்ன விஷயம்?'' என்று கேட்டான்.

அவரும் ''ஒன்றும் இல்லே. நீங் கள் வரதட்சணையை'' என்று கூறியவாறே முடிக்க முடியாமல் பலமாக இருமலானுர். அவர் விழி பிதுங்க பேச முடியாமல் தண் ணீர் குடிக்க வேண்டும் என்று சைகை செய்தார். உடனே சேக ரின் தந்தை தண்ணீர் கொண்டு வர அந்த அறையை விட்டு வெளியே ஓடினுர்.

சற்று நேரத்திற்கெல்லாம் அவர் தண்ணீர் கொண்டு வந்து மீசைக் காரரிடம் கொடுக்க அவரும் குடித்து விட்டு ''வரதட்சணைப் பணம் இப்போது கொண்டு வந்து கொடுக்கலாமா என்று விமலா வின் தந்தை கேட்டு வரச் சொன் ஞன்'' என்ருர்.

சேகரின் தந்தையும்! ஆகா! தாராளமாகக் கொண்டு வரச் சொல்லுங்கள்'' என்ருர்.

மீசைக்காரர் அங்கிருந்து நேராக விசுவநாதனிடம் போய் ''கொஞ்சம் இப்படி வாருங்கள் ஒரு விஷயம்'' எனவே விசுவ நாதனும் அவரைத் தன் அறைக் குள் அழைத்துச் சென்ருன். சற்று நேரத்திற்கெல்லாம் விசுவநாதன் தன் அறையிலிருந்து வெளியே ஓடி வந்து ''சட்டெனத் தண்ணீர்



கொண்டு வாருங்கள். மீசைக் காரமாமா தவிக்கிருர். ஓரே இரு மல்.'' என்ருன். அடுத்த நிமிடம் யாரோ தண்ணீர் கொண்டு வர அதை வாங்கிக் கொண்டு அவன் தன் அறைக்குள் போனுன்.

சற்றுநேரத்திற்கெல்லாம் மீசை க்காரர் விசுவநாதனின் அறையி லிருந்து நன்கு நடந்து போவதை அங்கிருந்தவர்கள் பார்த்தார்கள். அதற்கு ஐந்து நிமிடங்களுக்குப் பின் ''ஐயோ! போயிற்றே!! என்று விசுவநாதன் அறையிலி ருந்து கத்துவது கேட்டு எல்லா ரும் ''என்ன? என்ன? என்று அறைக்குள் சென்ருர்கள். அங்கே விசுவநாதன் ஒரு திறந்து



அங்கே சேகரின் தந்தையும் ஏதோ கோபமாகக் கத்திக்கொண்டிருப்பதை அவர்கள் கேட்டார்கள். அவர் ''எங்கே அந்த மீசைக்கார மாமா? என் பணம் ஐயாயிரம் ரூபாயை அடித்துக் கொண்டு போய் விட்டானே. இருமல் வந்தது போல நடித்து என்னை அறையிலிருந்து போக வைத்து பணத்தை திருடி விட்டான்'' என்றார்.

அப்போது அங்கே வந்த விமலாவின் தந்தை ''உங்கள் பிள்ளையின் மாமாவான அந்த மீசைக்காரன் என் பணம் பத்தாயிரத்தைத் திருடிக் கொண்டு போய் விட்டான்'' என்றான்.

சேகரின் தந்தையோ ''என் பிள்ளையின் மாமனா? அவன் உன் மகளின் மாமன் என்று சொல்லிக் கொண்டல்லவா இங்கே வந்தான்?'' எனவே விமலாவின் தந்தை ''அவன் ஒன்றும் எங்கள் சொந்தக்காரன் இல்லை. உங்கள் சொந்தக்காரன் தான்'' எனவே சேகரின் தந்தை திகைத்துப்போனார். அடுத்த வினாடியே மீசைக்கார மாமா யாருக்கும் சொந்தக்காரன் அல்ல என்பது தெரிந்து விட்டது.

அப்போது சேகர் தந்தையைத் தனியே அழைத்துப் போய் 'நான் தான் வரதட்சனை வாங்க வேண்டாம் என்றேன். கேட்டீர்களா?

கிடக்கும் பெட்டியின் பக்கம் உட்கார்ந்து கொண்டு ''இதில் வைத்திருந்த வரதட்சணைப் பணம் பத்தாயிரமும் காணவில்லையே. சம்மந்தி கேட்டு அனுப்பினார் என்று மீசைக்கார மாமா இப்போது தான் சொல்லி விட்டுப் போனான். இந்த அறையில் அவனைத் தவிர வேறு யாரும் வரவில்லை. இருமல் என்று நாடகமாடி என்னை அறையிலிருந்து வெளியே அனுப்பி விட்டுப் பணத்தைச் சுருட்டிக் கொண்டு போய் விட்டானே.'' என்றான். உடனே மீசைக்காரப் பேர்வழியைத் தேடி கொண்டு பலர் மாப்பிள்ளையின் வீட்டிற்கு ஓடினார்கள்.

இப்போது யாரோ ஒருவன் நம் உறவினன் என்று சொல்லி விசுவநாதனை ஏமாற்றிப் பத்தாயிரம் ரூபாயைத் திருடிக்கொண்டுபோய் விட்டான். நம்மிடமிருந்தும் அவன் ஐயாயிரம் திருடிப் போய் விட்டான். நன்ருக அவமானப் பட்டோம். இனி வரதட்சணைப் பற்றிப் பேசாதீர்கள்'' என்ருன்.

இதற்குள் முகூர்த்த வேளை வந்தது. எனவே சிலர் வந்து சேகரை அழைத்துப் போய் மணையில் உட்கார வைத்தனர். அவனும் விமலாவின் கழுத்தில் தாலியைக் கட்டி மூன்று முடிச்சுகள் போட்டான்.

கல்யாணம் முடிந்து எல்லோரும் ஊருக்குக் கிளம்பினர். தனி வண்டியில் சென்று கொண்டிருந்த விமலா தன் கணவனிடம் ''உங்கள் மீசைக்கார மாமா அடித்த கூத்தைப் பார்த்தீர்களா?'' என்ருள். சேகரும் சிரித்தவாறே ''அதுவா? உங்கள் அப்பாவிடம் பணம் ஏது? என் தந்தையின் பணம் தான் உண்மையில் எடுக்கப்பட்டது. உன் தந்தை தன் பத்தாயிரம் போனது போல நடித்தார். இதெல்லாம் நானும் உன் தந்தையும் முன் கூட்டியே யோசித்துத் தயாரித்தத் திட்டம். என் தந்தையின் பணம் போனதாலேயே உன் நந்தையின் பணம் போய் விட்டது என என் தந்தை நம்பினுர். அந்த மீசைக்காரப் பேர்வழி என் நண்பன் ராஜபார்ட் ரங்கராஜன். இதோ அவன் எடுத்த பணம்'' என ஐயாயிரம் ரூபாயை அவளிடம் காட்டினுன்.

விமலாவும் ''ஓ! அது தானே பார்த்தேன். என் தந்தையிடம் பணம் இல்லையே எப்படி வரதட்சணை கொடுக்கஇசைந்தார் என்று? இப்போதல்லவா புரிகிறது" என்று சிரித்துக் கொண்டே கூறினுள். சேகரும் ''வரதட்சணை வாங்கக் கூடாது என்ற என் கொள்கையும் நிலைத்தது'' என்ருன்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1980 டிசம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



P. Sundaram





Azmat A. Syed

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

★ அக்டோபர் 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.

★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## ஆகஸ்ட் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : பெண்மை மீட்டும் இளமை கீதம்.
இரண்டாவது போட்டோ : தாய்மை போற்றும் மழலை கீதம்.

பரிசு பெற்றவர் : சாந்தா வெங்கட கிருஷ்ணன்,
பெர்ஹாம்பூர், ஒரிஸ்ஸா மாநிலம்.

பரிசுத் தொகை ரூ. 25 ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

Printed by B. V. REDDI at Prasad Process Private Ltd., and Published by B. VISWANATHA REDDI for CHANDAMAMA CHILDREN'S TRUST FUND (Prop. of Chandamama Publications) 188, Arcot Road, Madras-600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# கோபால் பல்பொடி




பாக்கெட்விலை:35 காசு

வாங்கி உபயோகியுங்கள்.

தயாரிப்பவர்கள் :

## எஸ். பி. எஸ். ஜெயம் அன் கோ.,

மதுரை–625 001.

MINERVA

5 வருடம் உத்திரவாதமுள்ள 'மெரி' சூப்பர் ஸ்பெஷல் தங்க கவரிங் நகைகளை 15 வருட ஆராய்ச்சியின் பலனாக இந்தியாவில் முதல் முறையாகத் தயாரித்து இந்தியா முழுவதும் அதிக அளவில் வி.பி.பி. மூலம் அனுப்பி வரும் ஸ்தாபனம். சகல விபரங்களுக்கும் இனாம் கேட்லாக் வாங்கிப் பார்க்கவும். இதில் உள்ள நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் பொருட்கள் அனுப்பப்படும். (வி.பி.பி. சார்ஜ் தனி)




தபால் பெட்டி 1405, ஸ்தாபிதம்: 1963 டிரேட் மார்க்: 346088

14, ரெங்கநாதன் தெரு, தி.நகர் சென்னை-600 017.

## மெரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

"PREMA"

**கேம்ப்பா ஆரஞ்சு மணக்குதே-**
**நம் எல்லோரையும்**
**ஒண்ணு இழுக்குதே**

வாழ்வில் மகிழ்ச்சியைத் தருகிறது
கேம்ப்பா-இப்போது, அதில் ஆரஞ்சு*
சுவை உள்ளது. பருகிடுவீர் கேம்ப்பா
அறிந்திடுவீர் அதன் ருசியை—மகிழ்ந்திடுவீர்
அதன் மணத்தை— அவர்களைப் போலவே
அருந்துங்கள் கேம்ப்பா ஆரஞ்சு*...
இப்போதே.

*ஆர்ட்டிஃபிசியல் ஃப்லேவர்




ஆரஞ்சு மணம்

OBM/4839






# ராசுவும் வாசுவும்

## துப்பறிகிறார்கள்



















